# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

**விகாரி – ஆவணி, புரட்டாசி – 2019 – ஆகஸ்ட், செப்டம்பர்**



கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் சார்பில் நடைபெற்ற சுதந்திர தின விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விகாரி - ஆவணி, புரட்டாசி

2019 - ஆகஸ்ட், செப்டம்பர் இதழ் - 86, 87



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

கருநீல மிடற்றானைக் கண்கள்மூன் றுடையானைக்
கையிலனல் கொண்டானைக் கருணை காட்டிக்
காப்பானை ஏயர்கோன் இடர்கள் தீரக்
கவிபடைத்த சுந்தரர்க்குத் தோழ னான
பெரியவனைக் கங்கையெனும் ஆறுடைய பெருமானைப்
பித்தனெனத் திருமுறைகள் பேசு கின்ற
பிஞ்ஞகனைக் கழனிநகர் உறைவான் தன்னைப்
பெருந்துறையில் மேயானைப் பேதம் இன்றித்
திருமாலும் நான்முகனும் தேடிடினும் காணாதான்
திங்களுக்கு வாழ்வளித்த தேவ தேவன்
திருவண்ணா மலையானைத் தெய்வக் கோமான்
திருமுறைக்குப் பொருளானான் என்று போற்ற
வருவானைக் கொற்றவாள் தனைமறைத்து மன்னவனை
வரவழைத்துக் கோயிலொன்று கண்டான் தன்னை
வதுவைகொண்ட வடிவழகி நெல்லைத் தாயை
வணங்கியவர் நலம்பெறுவார் வணங்கு வோமே.

*– காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்*

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

இல்லறத்தை முறையாக நல்லறமாக நடத்தி வாழ்ந்தவர்கள் குறிப்பிட்ட காலத்திற்குப் பின் குடும்பப் பாசத்தைச் சிறிது சிறிதாகக் குறைத்துக் கொண்டு பொது நலனைக் கருதித் தொண்டு தவம் செய்து வாழ்கின்ற மூன்றாவது காலம் தொண்டுக் காலம். இதனை வடமொழியில் வானப்ரஸ்தம் என்று அழைப்பார்கள்.

திருமணமாகி குழந்தைப்பேறு. அவர்கள் கல்வி, அவர்களுக்குடைய அடிப்படைத் தேவைகளுக்கு வேண்டிய பொருளாதாரம், இவற்றையெல்லாம் ஏற்படுத்தி, அவர்களுக்குத் திருமணம் செய்து வைத்து அவர்களைத் தனி வாழ்வில் ஈடுபடுத்திய பின் வானப்ரஸ்த வாழ்க்கையைத் தம்பதியர் தொடங்க வேண்டும். ஆண்டு அனுபவித்து எல்லோர்க்கும் ஆற்ற வேண்டிய கடமைகளையும் ஆற்றிய மகிழ்வோடு தர்ம காரியங்களைச் செய்வதே வானப்ரஸ்தம்.

முற்காலத்தில் தம்பதியர் ஒன்று சேர்ந்தோ தனித்தனியாகவோ காட்டிற்குச் சென்று பரம்பொருளை நோக்கித் தவம் செய்வது பழக்கமாக இருந்தது. சிலநேரம் ஆண்கள் மட்டும் காடுகளுக்குச் சென்று தவம் செய்வதும். இறைப்பணி செய்வதும், வாழும் உயிரினங்களுக்குத் தொண்டு செய்வதுமாகத் தங்கள் காலத்தைக் கழித்தார்கள்.

பெண்மணிகள் சமுதாயத்தில் நொடித்தவர், நொந்தவர், இடர்ப்படுபவர் அனைவருக்கும் தம்மால் இயன்ற சேவைகளைச் செய்து மன நிறைவு கொண்டனர். எனவே இதன்னைத் தவக்காலம் அல்லது தொண்டுக்காலம் என்றே அழைக்க வேண்டும். இந்தத் தொண்டுக் காலத்தில் சுயநலத்தை வெகுவாகக் குறைத்துக் கொண்டு பொது நலன் கருதி எல்லா ஜீவர்களுக்கும் குறிப்பாக ஆதரவற்ற முதியோர், குழந்தைகளுக்குத் தங்களால் இயன்ற அளவு ஆதரவு அளிப்பது.

தான் மட்டும் தொண்டு செய்வதோடு நிறுத்தாமல் ஒத்த மனமுடையவர்களைச் சேர்த்துக் கொண்டு தொண்டு நிறுவனத்தை ஏற்படுத்திக் கல்வித் தொண்டு, மருத்துவத் தொண்டு, பொருளுதவி ஆகியவற்றைச் செய்வது வானப்ரஸ்த்த தொண்டு காலம் ஆகும்.

இந்தத் தொண்டுக் காலத்தில் குடும்பத்தின் மீது தாம் கொண்ட பாசத்தை அறவே ஒதுக்கி மனம் முழுவதையும் துயர்ப்படுகிறவர்களுக்கும் நொந்தவர்களுக்கும் சேவை செய்து அவர்களைத் தேற்றுவதும் மன ஆறுதல் தருவதும் மிகப்பெரிய சேவையாகும். வானப்ரஸ்த பருத்திலே தயையும், கருணையும் எப்பொழுதும் நிலைபெற்றிருக்க வேண்டும். தேவைப்படுகின்ற போது பொங்கி எழுந்து காரியங்களையும் தொண்டையும் செம்மையாகச் செய்து முடித்து மெலிந்தவர்களுக்குத் தெம்பும் நம்பிக்கையும் அளிப்பதே வானப்ரஸ்தக் காலம் ஆகும்.

குடும்பஸ்தன் தன்னைச் சுற்றியுள்ள ஐவர்க்குத் தொண்டு செய்யக் கடமைப்பட்டவன். வானப்ரஸ்தன் தன்னைச் சுற்றி உள்ள அனைத்து உயிர்களுக்கும் தொண்டு செய்யக் கடமைப்பட்டவன். அதிலும் பலவற்றாலும் துன்பப்படுகின்ற ஜீவர்களுக்கு உதவி, ஆறுதல் அளிப்பது வானப்ரஸ்தனுடைய முக்கிய கடமையாகும். குறிப்பாக, தம்மாலே இயன்ற அளவு கருணை காட்டித் தொண்டு செய்து துயரத்தில் உள்ளோர்க்கு அமைதியும் ஆறுதலும் அளித்து மெலிந்த மக்கள் முன்னேற்றத்திற்கு உழைப்பதும் வானப்ரஸ்தனுடைய இன்றியமையாத கடமை ஆகும். உதாரணமாக வள்ளல் அழகப்ப செட்டியார், எம்முடைய குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் போன்றோரைக் குறிப்பிடலாம்.

தெய்வத்திரு. பேராசிரியர்.சு. குழந்தைநாதன் அவர்கள் வள்ளல் அழகப்பரைப் பற்றி தொண்டால் பொழுது அளந்த தூயோன் என்று பெருமிதத்தோடு எழுதினார். எனவே தொண்டுக் காலத்தைப் புண்ணிய காலமாக வாழ்ந்து பரம்பொருளின் அருளைப் பெறுவீர்களாக.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***

**27.07.2019 மற்றும் 24.08.2019 ஆகிய நாள்களில் முற்பகல் திருக்குறள் முற்றோதல் நிகழ்ச்சி நடைபெற்றது. 27.07.2019 அன்று முனைவர். மு.பழனியம்மாள் நாடுகாண் காதை பற்றியும் 24.08.2019 அன்று நல்லாசிரியர். கா. நாகப்பன் காடுகாண் காதை பற்றியும் இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் உரையாற்றினர்.**

# தில்லைத் தரிசனம்

முனைவர் மு. வள்ளியம்மை பேராசிரியர் (ஓய்வு),
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

தலங்களுள் தலைமையானதும் முதன்மையானதும் தில்லையே. பாடல் பெற்ற தலங்களை வரிசைப்படுத்துங்கால் முதலில் வைத்து எண்ணப்பெறுவது இதுவே. இது சோழநாட்டு வடகரைத் தலம். இது மிகப் பழமையானது. மாணிக்கவாசகப் பெருமான் இத்தலத்தைத் தில்லை மூதூர் என்பார்.

தில்லை மூதூர் ஆடிய திருவடி (திருவா - 2) என்பது அவ்வடி. மாணிக்கவாசகர் காலத்திலேயே இது மூதூராகக் கருதப்பட்டது என்பதிலிருந்து இதன் பழமையை உணர முடிகின்றது. கோயில் என்பது சிதம்பரம். இது தலைமைபற்றி வந்த சிறப்புப் பெயர். இதற்குத் தில்லை, சிற்றம்பலம், சிதம்பரம், புலியூர், பெரும்பற்றப் புலியூர், குகை, தகராகாசம், புண்டரீகபுரம், பொன்னம்பலம், பொது என்பன போன்ற பிற பெயர்களும் உண்டு.

திருமுறைகளை ஓதத் தொடங்கும் போது திருச்சிற்றம்பலம் என்று சொல்லித் தொடங்கி, ஓதி முடிக்கும்போது திருச்சிற்றம்பலம் என்று சொல்லி முடிக்க வேண்டும். திருமுறைகளை. எழுதும்போது தொடக்கத்திலும் முடிவிலும் திருச்சிற்றம்பலம் என எழுத வேண்டும். இதனை.

வடநூலும் தமிழ் நூலும் நிலை கண்டுணர்ந்த சிவஞான முனிவர் காஞ்சியில் காஞ்சிப் புராணத்தை அரங்கேற்றும் போது அரங்கேற்றத் தொடக்கத்தில் திருச்சிற்றம்பலம் எனத் தொடங்க அது தவறு என ஒரு புலவர் மறுத்தார். சிவஞான முனிவரின் மாணவர் கச்சியப்பர் ஓதுவாரை அழைத்துத் தேவாரம் பாடச் சொல்ல அவர் திருச்சிற்றம்பலம் எனத் தொடங்கிப் பாடினார். ஏன் எனக் காரணம் கேட்க அவர் திருமுறைகளுள் எதை ஓதினாலும், எங்கு ஓதினாலும் எத்தலத்துக் குரியதை ஓதினாலும் முதலில் சிற்றம்பலத்தை நினைத்து, திருச்சிற்றம்பலம் என்று சொல்லி ஓதத் தொடங்குவதே முறை எனக் கூறினார், என்று கூறும் நிகழ்ச்சி வலியுறுத்தும்.

தலைமையும் முதன்மையுமான திருச்சிற்றம்பலத்தை முன்னிட்டே எதையும் சைவர்கள் செய்வர்.

உலகம் பஞ்சபூதங்களால் ஆனது. மண், நீர், தீ, வளி, வான் என்பன ஐம்பூதங்கள். இவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என வடமொழியில் கூறப்பெறும். உயிர்களது உடம்புகளும் ஐம்பூதங்களின் சேர்க்கையால் ஆனவையே. அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் என்ற பழமொழியும் ஈண்டு அறியத்தக்கது.

ஐம்பூதங்கள் அடிப்படையானவை என்பதைத் தெளிவாகவும் நுட்பமாகவும் உணர்ந்த நமது பெரியோர்கள் ஒவ்வொரு பூதத்தின் பெயராலும் ஒரு தலத்தை ஏற்படுத்தினர். அவை பஞ்சபூதத் தலங்கள் எனப்படும். அவையாவன.

மண் – பிருதிவித்தலம் – காஞ்சிபுரம் மற்றும் திருவாரூர்
நீர் – அப்புத்தலம் – திருவானைக்கா
தீ – தேயுத்தலம் – திருவண்ணாமலை
வளி – வாயுத்தலம் – திருக்காளத்தி
வான் – ஆகாயத்தலம் – சிதம்பரம்

சிதம்பரம் ஆகாயத்தலம், வெட்டவெளி. இங்கு இறைவன் வான் (ஆகாய) வடிவில் ஆகாயலிங்கமாக எழுந்தருளியுள்ளான். இதைக் குறிப்பதே சிதம்பர ரகசியம்.

அனாகதம் என்றால் இருதயம். நமது உடலில் ஆறு ஆதாரங்கள் உள்ளன. அவை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன – இதுபோன்றே உலகமாகிய விராட புருடனுக்கும் ஆறாதாரங்களாக ஆறு ஊர்களைப் பெரியோர்கள் குறித்துள்ளனர். ஆறு ஆதாரங்களும் நம் உடலில் அவற்றின் இருப்பிடங்களும் ஆறு ஆதாரத் தலங்களும் வருமாறு.

மூலாதாரம் – எருவாய் – நிலம் – திருவாரூர்
சுவாதிட்டானம் – கோசத்திற்கும் நாபிக்கும் நடு – நீர்
திருவானைக்கா
மணிபூரகம் – நாபி(கொப்பூழ்) – தீ – அண்ணாமலை
அனாகதம் – இருதயம் – வான் – தில்லை(சிதம்பரம்)

விசுத்தி - கண்டம் - வளி - காளத்தி

ஆக்ஞை - புருவமத்தி - காசி

ஆறாதாரத் தலங்களில் ஐந்து தலங்கள் பஞ்ச பூதத் தலங்கள். இவற்றுள் சிதம்பரம் இருதயத் தலமாக இருக்கிறது.

**சிதம்பர ரகசியம்**

தில்லைத் திருக் கோயிலில் சிதம்பர ரகசியம் என்பது ஒன்றுண்டு. நடராசப் பெருமான் திருநடம்புரியும் சிற்சபையில் நடராசப் பெருமானுக்கு வலப்புறத்தில் சிதம்பர ரகசியம் உள்ளது. இறைவனை அருவமாக வழிபடும் இடமாதலின் இது ரகசியம் எனப் பெயர்பெற்றது. உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூவகை வழிபாடும் சிதம்பரத்தில் உண்டு. உருவம் - நடராசர், அருவம் - சிதம்பரரகசியம், அருவுருவம் - படிகலிங்கம். ரகசியம் எப்போதும் திரையால் மறைக்கப்பட்டிருக்கும். இதுபோன்று மற்ற எல்லாச் சந்நிதிகளும் எப்போதும் திரையால் மறைக்கப்படுவதில்லை. அபிடேக அலங்காரக் காலங்களில் மட்டுமே சந்நிதிகளில் திரையிடுவர். இது ரகசிய சந்நிதியாதலின் எப்போதுமே திரையிடப்பட்டிருக்கும். திரையின் வெளிப்புறம் கருப்பாகவும் உட்புறம் சிவப்பாகவும். இருக்கும். சிவப்பு கருப்புப் பட்டுத் துணிகளால் தைக்கப்படும் இத்திரை ஆண்டுக்கு இருமுறை புதுப்பிக்கப்பெறும். ஆனி, மார்கழி விழாக்களின் போது பழைய திரை அகற்றப்பெற்று புதுத்திரை சாத்தப் பெறும். நாள்தோறும் ஆறுகாலப் பூசையிலும், ஒவ்வொரு காலப் பூசையின் நிறைவில் அன்றைய பூசை முறைத்தீட்சிதர் திரையை மூன்றுமுறை விலக்கித் தரிசனம் செய்விப்பார். இரவு இரண்டாங்காலப் பூசை விசேட பூசையாக நிகழும். திரை தூக்கப்பட்டதும் சுவரில் பொன்னால் செய்யப்பட்ட வில்வச் சரங்கள் மாலையாகத் தொங்க விடப்பட்டிருக்கும். அவ்விடத்தில் (எந்திரம்) சக்கரம் நிறுவப் பெற்றுள்ளதாகக் கூறுவர். திரைக்குள் உள்ள வெட்டவெளியே சிதம்பர ரகசியமாகும். இறைவன் ஆகாய வடிவில் அருபமாய் (மந்திரவடிவாய்) அங்கு எழுந்தருளியுள்ளான் என்பதே ரகசியம். நம் ஊனக் கண்களுக்குத் தெரியவேண்டியே குறியாக வில்வச் சரங்கள் தொங்க விடப்பட்டுள்ளன.

ஆனி, மார்கழித் திருவிழாக்களின் போது சக்கரத்துக்குப் புனுகுச்

சட்டம் சாத்தப் பெறும். மற்ற எல்லாக் கோயில்களிலும் உள்ள தெய்வ சக்திகள் அனைத்தும் நள்ளிரவு வழிபாட்டுக்குப் பின் சிதம்பர ரசகியத்துள் வந்து ஒடுங்குவதாகவும், அதிகாலை முற்கால வழிபாட்டுக்குத் தத்தம் இடம் சார்வதாகவும் ஓர் ஐதீகம் உண்டு.

வேறு எக்கோயிலிலும் ரகசியம் இல்லை. இது சிதம்பரதிற்கே தனிச்சிறப்பு. கோயில்களுள் சிறந்தது சிதம்பரம், சிதம்பரத்தில் சிறந்தது ரகசியம் என்று கூறுவர்.

**சபை அம்பலம்**

தமிழகத்தில் இறைவன் அருட் கூத்தியற்றும் சபைகள் ஐந்து அவை,

கனகசபை (பொன்னம்பலம்)– சிதம்பரம்

ரஜித்சபை (வெள்ளியம்பலம்)– மதுரை

தாமிரசபை – திருநெல்வேலி

இரத்தினசபை – திருவாலங்காடு

சித்திரசபை – திருக்குற்றாலம்

பஞ்சபூதத் தலங்களின் அமைப்பும், பஞ்ச சபைகளின் அமைப்பும் பண்டைத் தமிழறிஞர்களின் தத்துவ ஞானச் சிறப்பைக் காட்டுவன.

சோழ நாட்டில் தில்லையில் பொற்சபை, பாண்டிய நாட்டில் மதுரையில் வெள்ளியம்பலம், தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலியில் தாமிரசபை. சற்றுத்தள்ளி குற்றாலத்தில் சித்திரசபை, (ஓவிய மன்றம்) இவை எல்லாவற்றுக்கும் வடக்கே தொண்டை நாட்டில் திரு ஆலங்காட்டில் இரத்தின சபை (மணியம்பலம்)

சபைகள் அனைத்தும் தமிழ்நாட்டில்தான் அமைந்துள்ளன. வடக்கேயிருந்து தெற்கே வரிசையாக உலோக அம்பலங்கள் மூன்று, ஓவிய அம்பலம் ஒன்று, மணியம்பலம் ஒன்று. ஆக ஐந்து சபைகள்.

தமிழகத்தில் ஐம்பெரும் சபைகளுள் ஒன்றான சிதம்பரம் தனக்குள்ளும் ஐந்து சபைகளை உடையது. அவை சிற்சபை, பொற்சபை, தேவசபை, நிருத்த(நடன) சபை, இராஜசபை என்பனவாம். இவை ஐந்தையும் பஞ்ச பூதச் சபைகள் என நம் வள்ளற் பெருமான் குறித்தருளுவர். மண் – கனக (பொற்) சபை, நீர் – இராஜசபை, தீ – தேவசபை, வளி – நிருத்த சபை, வான் – சிற்சபை என்பது வள்ளற்

பெருமானின் உபதேசக்குறிப்பு, இவ்வைந்திலும் சிற்சபை சிறந்தது. நடராசப் பெருமான் சபைக்கு நாயகர் ஆதலின் சபாபதி என்றும் சபாநாதர் என்றும் சபாநாயகர் என்றும் வழங்கப் படுவர். நடராஜர் எழுந்தருளியுள்ளது சிற்சபை. அதன் சந்நிதி நாம் நின்று கொண்டு வணங்கும் பொற்சபை (கனகசபை); கனகசபை - மண், சிற்சபை - விண் என்கின்றனர். அதாவது நாம் மண்ணில் நின்று வண்ணை வணங்குகிறோம். ரகசியத்திற்குக் கீழே முகலிங்கம் ஒன்றும் உண்டு.

வள்ளலார், மண்ணிலுள்ள நாம் விண்ணிலுள்ள பரம்பொருளை வழிபடுகிறோம். மண்ணில் விண் என்ற நுட்பமும் உணரப்பாற்று என்பார்.

**நடராச வடிவம்**

சிவத் திருவுருவங்களில் தனிச்சிறப்பு வாய்ந்தது நடராசத் திருவுருவம். தில்லை நடராச வடிவம் கலைச்சிறப்பும் மிக்கது. இதன் கலைச்சிறப்பில் மேலைநாட்டவரும் சிந்தையைப் பறிகொடுத்த தன்மைக்குச் சான்றுகள் பல உள்ளன. இத்திருவுரு கலைச்சிறப்பால் மட்டுமின்றித் தத்துவச் சிறப்பாலும் உயர்ந்தது. பேரா இயற்கையின் ஓயா இயக்கமே இறைவனின் திருக்கூத்து. இத்திருக் கூத்தின் தத்துவ விளக்கமே நடராச வடிவம்.

சடை, அச்சடையில் விளங்கும் பிறை, கங்கை, கொக்கிறகு, வெண்தலை, முக்கண், குனித்த புருவம், கொவ்வைச் செவ்வாய், குமிண் சிரிப்பு, துடிவைத்தகை, அழலேந்தியகை, அபயகரம், வீசிய கரம், தூக்கிய திருவடி, ஊன்றிய திருவடி, பவளமேனி, பூசிய பால் வெண்ணீறு, பாம்புகள், மிதியுறும் முயலகன், ஓங்காரத்தைக் குறிக்கும் சுற்றியுள்ள திருவாட்சி, எழுத்துக்களைக் குறிக்கும் திருவாட்சியிலுள்ள சுடர்கள். இவையே நடராச வடிவம்.

திருவாசிக்கு இவ்வடிவத்தில் தனிச் சிறப்பு உண்டு. மற்ற திருவுருவங்களில் திருவாசி தனியாக இருக்கும். இத்திருவுருவில் திருவாசி திருவுருவோடு சேர்ந்தே இருக்கும. இவ்வாறு தத்துவத்தாலும், கலைச்சிறப்பாலும் சிறந்தது இத்திருவுருவம். இவ்வளவு சிறப்பு வாய்ந்த நடராச வடிவம் தமிழ் நாட்டிற்கே உரியது. வடநாட்டுக் கோயில்களில் நடராசர் திருவுருவம் இல்லை. ஐந்து சபைகளும் தென்தமிழ்நாட்டிலேயே இருப்பதும் கருதத்தக்கது.

தென் தில்லை மன்றினுள் ஆடீ போற்றி

திருவாசகம் - போற்றித் திரு வகவல் : 92

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

திருவாசகம் : போற்றி : 164 - 165 என்ற திருவாசக அடிகள் இதற்குச் சான்று பகரும்.

ஆகாயத்தலமாய், அனாகதத்தலமாய், பஞ்ச சபைகளைக் கொண்டதாய், ஆனந்தக் கூத்தாடும் இறைத்தலமாய், ரகசியம் கொண்ட தனித்தலமாய், தலைமையும் முதன்மையும் கொண்ட தலமாய்ச் சிறப்புப் பெற்று விளங்குவதாலேயே சேக்கிழார், இத்தலத்திற்கு வந்து வணங்கியோர்க்கு மண்ணில் வந்த பிறவி அற்று இன்பம் பெருகும் என்கின்றார்.

தில்லையைத் தரிசிக்க முக்தி என்பதை இதன்வழி உணரலாம்.

## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**ஒற்றி ஆச்சே**

திருவொற்றியூர் வந்த காளமேகம் தியாகேசப் பெருமானை வணங்கிய போது அவருடைய திரு நடனத்தைக்கண்ட மகிழ்ச்சியில் போற்றிப் பாட வேண்டும் என்று எண்ணியவர் அதனைக் கேலி செய்வது போல் பாடிய பாடல் இது.

*ஆடும் தியாகரே ஆட்டம்ஏன் தான்உமக்கு*
*வீடும் சமுசாரம் மேலிட்டுக் - கூடிச்*
*செருக்கி விளையாடச் சிறுவர்இரண்(டு) ஆச்சே*
*இருக்கும்ஊர் ஒற்றி யாச்சே.*

**விளக்கம்** - திருநடனம் செய்யும் தியாகேசப் பெருமானே! உமக்கு ஏன் இந்த வேண்டாத ஆட்டம் எல்லாம். வீடும் சமுசார பந்தமும் அதிகமாகச் சேர்ந்து போய் விட்டதோ? கர்வத்தோடு விளையாடிக் கொண்டிருக்க இரண்டு ஆண்மக்கள் உள்ளனரே. நீர் இருக்கும் ஊரும் ஒற்றியூர் ஆயிற்றே. (ஒற்றி வைப்பது)

**வயிரம் இருப்பதா?**

செல்வச் செருக்கு உடைய ஒருவர் திருவாரூர்த் தியாகராசப் பெருமானுக்குத்தான் அணிவித்த வைர மாலையைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொண்டு இருந்தார்... அப்போது அங்கிருந்த அடியவர் ஒருவர் பெருமானை வணங்க வந்த காளமேகப் புலவரை நோக்கி அந்த வயிர மாலை அறவும் மீண்டும் பொருந்தவும் பாடுமாறு வேண்ட அவ்வாறே புலவர் பாடிய பாடல் இது.

*அன்னவயல் சூழ்ந்(து) இருக்கும ஆரூரான் நெஞ்சத்தில்*
*இன்னும் வயிரம் இருப்பதா - முன்னம்ஒரு*
*தொண்டன்மக னைக்கொன்றும் சோழன்மக னைக்கொன்றும்*
*சண்டனமக னைக்கொன்றும் தான்.*

**விளக்கம்** - அன்னங்கள் சூழ்ந்து இருக்கும் வயல்கள் நிறைந்த ஆரூர்ப் பெருமானே! உன் திருமார்பில் இன்னும் வயிரம் இருப்பதோ? (இங்கு வயிரம் என்பது வயிரத்தையும் சினம் என்ற பொருளையும் குறிக்கும்) முந்தைய நாளில் ஒப்பிலாத் தொண்டனான சிறுத்தொண்டனின் மகனைக் கொன்றானே! மனுநீதிச் சோழன் மகனையும் கொன்றானே! சண்டீசுவரனின் தந்தையை யும் கொன்றானே! இனியும் எதற்கு வயிரம்? (சினம்) என்று இரு பொருள்படப் பாடவும் வயிர மாலை தானே அறுந்து விழுந்தது என்பர்.

**அம்பலத்தே போம் -**

காளமேகம் திருவாரூர் வந்து தியாகேசப் பெருமானை வணங்கிய போது பாடியது.

*பாரூர் அறியப் பலிக்(கு) உழன்றீர்பற்றிப். பார்க்கும் இடத்(து) ஓர்*
*ஊரும் இல்லை இருக்கவென் றாலும்உன் ஊரும்ஒற்றி*
*பேரூர் அறியத் தியாகர்என் றேபெரும் பேரும் பெற்றீர்*
*ஆர்ஊரி லேஇருப் பீர்இனிப் போய்விடும் அம்பலத்தே.*

**விளக்கம்** - உலகிலுள்ள ஊரவர் எல்லாம் அறியும்படி பிச்சைக்காக அலைந்தீர். உம்மை நெருங்கி ஆராய்ந்து காணுங்கால் உமக்கென ஓர் ஊரும் இருப்பதாகத் தெரியவில்லை. அதுதான் இல்லை. நீர் இருக்க என்றாலும் இவ்வூர் ஆகுமோ என்று எண்ணினால் இதுவும் ஒற்றியாக இருக்கின்றது. பேரூர்கள் அறியும்படி பெரியதொரு

தியாகவான் என்ற பேரையும் பெற்றுவிட்டீர். இனி எவருக்கு உரிய ஊரிலே நீர் தங்கி இருப்பீர்? எந்த ஊரும் உமக்கென இல்லாமையாலே நீர் அம்பலத்திற்கே சென்றுவிடும்.

**ஏன் நஞ்சு தின்றார் ?**

வாழ்விலே வெறுப்படைந்தோர் தற்கொலைக்கு முயன்று நஞ்சுண்பர். ஆனால் சிவபெருமான் ஏன் நஞ்சினை உண்டார் ? மயிலாடுதுறை என்ற பதியிலே நடந்த நிகழ்வு இது. அவர் ஏன் நஞ்சுண்டார் என்பதற்கான காரணத்தைக் காளமேகம் கீழ்க்கண்ட பாடல் மூலம் விளக்குகின்றார்.

***வள்ளல் எனும் பெரிய மாயூர நாதருக்கு***
***வெள்ளிமலை பொன்மலையு மேஇருக்கத் - தெள்உமையாள்***
***அஞ்சல் அஞ்சல் என்று தினம் அண்டையிலே தான்இருக்க***
***நஞ்சுதனை ஏன் அருந்தி னார்?***

**விளக்கம் :** வள்ளல் தன்மை உடைய புகழ் பெற்ற மாயூரநாதருக்கு வெள்ளி மலையான கயிலாயமும் பொன்மலையாகிய மேரு மலையும் சொந்தமாய் இருக்க தெளிந்த அறிவுடைய உமையாள் அருகிலே இருக்கப் பெருமான் விரக்தியற்று ஏனய்யா நஞ்சினை அருந்தினார் ?

**புற்றுமண்**

வயித்தீசுவரன் கோயில் புற்றுமண் மிக்க சிறப்பு உடையதாகும். அதை அறிந்த காளமேகம் அதனைச் சிறப்பித்துப் பாடுகின்றார். திருவண்ணாமலை வாழ் சம்பந்தாண்டான் தம்மை மதியாது இருந்தமை கண்டு அவன் மீது வசைபாட அவனுக்கு நோய் வந்ததாம். அவன் புற்று மண்ணை உண்டபின் நோயில் இருந்து விடுபட்டாராம். அதனைச் சிறப்பித்துக் காளமேகம் பாடிய பாடல் இது.

***மண்டலத்தில் நாளும் வயித்தியராய்த் தாம்இருந்தும்***
***கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ - தொண்டர்***
***விருந்தைப்பார்த்(து) உண்(டு)அருளும் வேளூர்என்னாதார்***
***மருந்தைப்பார்த் தால்சுத்த மண்.***

**விளக்கம் :** இவ்வுலகிலே எந்நாளும் வயித்தியராகவே தாம் இருந்த போதிலும் தம் கழுத்தில் அமைந்த கறையினை அவர் தீர்த்துக் கொள்வதை எவரேனும் கண்டதுண்டோ? கண்டதில்லை தொண்டர்கள்

படைக்கின்ற விருந்தை உண்டருள்கின்ற வேளூரில் இருக்கின்ற என் தலைவரின் மருந்தை உற்று நோக்கினால் அது வெறும் மண் என்பதை அறிவீர்களா ?

### நெருப்பை அணைத்தவள்

புள்ளிருக்கு வேளூர் என்று புகழப்படுகின்ற வயித்தீஸ்வரன் கோவிலுக்குச் சென்ற காளமேகம் பெருமானைத் தரிசித்தபோது அம்மை சிவனின் உடலில் பாதியாய் இருப்பது கண்டு நெஞ்சைப் பறி கொடுத்த நிலையில் பாடியது.

*தீத்தான்உன் கண்ணிலே தீத்தான்உன் கையிலே*
*தீத்தானும் என்றன் சிரிப்பிலே - தீத்தான்உன்*
*மெய்எலாம் புள்ளிருக்கு வேளூரா உன்னைஇந்தத்*
*தையலாள் எப்படிச்சேர்ந்தாள் ?*

**விளக்கம் :** புள்ளிருக்கு வேளூரில் கோயில் கொண்டு இருக்கின்ற பெருமானே! உன் நெற்றிக் கண்ணில் விளங்குவதும் நெருப்புதான். திருக்கரத்தில் இருப்பதும் நெருப்புத்தான். திரிபுரத்தை அழிக்க நீ சிரித்த சிரிப்பிலே எழுந்ததும் நெருப்புத்தான். நின் திருமேனி முழுவதும் நெருப்பு மயமானதே. இது இப்படி இருக்க இந்தப் பெண்மணியான உமையவள் எப்படி வந்து உன்னைச் சேர்ந்தாளோ ? அதுதான் எனக்கு வியப்பாய் உள்ளது.

### எந்த வினை தீர்ப்பார் இவர் ?

வேளூர் வயித்தியநாதரைத் தரிசிக்கக் காளமேகப் புலவருக்கு ஓர் ஐயம் தோன்றியது. தம் சொந்தக்காரர்களின் நோயைப் போக்கஇயலாதவர் பிறருடைய வினைகளை எவ்வாறு தீர்க்கப் போகிறார்? என்று கேட்கிறார்.

### குறமகளை மணந்தான்

முருகப்பெருமான் குறவர் குலக் கொடியான வள்ளியை மணந்தான். அதைக் கண்ட பலரும் வருத்தம் அடைந்தனர். அதற்குப் பதில் சொல்வது போலப் பிறகடவுளரின் தன்மைகளை அமைத்துப் பாடிய பாடல்

*மரு(கு)இருக்கும் வேளூரின் வயித்திமகன் குறமகளை*
*மணந்தான் என்றே*

*உருகிஅரன் நஞ்(சு)உண்டான் உமையவளும்*

*தவம்புரிந்தாள் உயர்மான் மேனி*

*கருகிமிக மண்தின்றான் கமலன்முகம் நான்(கு) ஆனான் கடவு ளோர்கள்*

*இருவிழியும் இமையாமல் இரவுபகல் உறங்காமல்*

*இருக்கின்றானே.*

**விளக்கம் :** மணம் பொருந்திய செடிகள் விளங்கும் புள்ளிருக்கு வேளூரில் கோயில் கொண்டிருக்கும் வயித்தியநாதரின் திருமகனாகிய முருகன் குறமகளை மணந்து கொண்டான். அதனை அறிந்த அவன் தந்தையான வயித்திய நாதன் நஞ்சை உண்டான். தாயான உமையவள் தவம் செய்யலானாள். உயர்ந்த மாமனான திருமால் மேனி கருத்து மிகவும் வருந்தி மண்ணைத் தின்றான். நான்முகம் தொங்கியது. மற்றையத் தேவர்களோ கண் இமைக்காமல் இரவு பகல் தூக்கம் இன்றி இருக்கலானார்.

**எப்படி வந்தது ?**

திருவண்ணாமலை சென்ற காளமேகம் அருணாசலேசுவரரை வணங்கிய போது சிறுத்தொண்டர் தம் மகனை அறுத்துச் சமைத்து அடியவராய் வந்த சிவனுக்குப் பரிமாறி நின்ற போது சிவபெருமான் சீராளா ! என்று அழைத்தபோது அவன் ஓடி வந்து நின்றான். இதனை நினைத்துப் பார்த்த காளமேகம் அது எப்படி முடியும் ? என்று கேட்பது போல அமைந்த பாடல் இது.

*சட்டியிலே பாதிஅந்தச் சட்டுவத்தி லேபாதி*

*இட்டகலத் தில்பாதி இட்டிருக்கத் - திட்டமுடன்*

*ஆடிவந்த சோணேசர் அன்(று)அழைத்த போதுபிள்ளை*

*ஓடிவந்த(து) எவ்வாறு உரை.*

**விளக்கம் :** சிவனடியாராக வந்த சிவநேசருக்குச் சிறுத்தொண்டர் படைத்த பிள்ளைக் கறியானது சட்டியிலே பாதியாகவும் சிவநேசருக்குப் பாதியாகவும் இட்ட உண்கலத்தில் பாதியாகவும் இருக்கத் திட்டமுடன் ஆடி வந்த சோணேசர் உறுதியுடன் சீராளா! என்று அழைக்க அவன் ஓடி வந்தானே ! அது எவ்வாறு நிகழ்ந்தது? என்பதை எனக்குச் சொல்லுவாயாக !

### ஊதும் குரங்கு

கங்கை வரை சென்று வெற்றி பெற்றமைக்கு அடையாளமாக இராசேந்திர சோழன் கட்டிய கோயில் கங்கை கொண்ட சோழேச்சுவரம். அங்கு சென்ற காளமேகம் அதனைச் சிறப்பித்துப் பாட எண்ணியவர் அவன் பெற்ற வெற்றியையும் சேர்த்துப் பாடிய பாடல்

*காவலன் எங்கள் கனவைப்பான் சோழேசன்*
*மாவலி கங்கை மணிவாரி - அப்புள்அங்கை*
*ஆஅனல்என்(று) தோய்க்க அதில்வா ரியமுத்தைக்*
*கொப்புளம்என்(று) ஊதும் குரங்கு.*

**விளக்கம் :** எங்களைக் காக்கும் காவலனும் எங்களது சிறந்த சேமநிதி போன்றவனுமான சோழ வேந்தன் மிக்க ஆற்றல் உடையவனாய்ச் சென்று வெற்றி பெற்றுக் கங்கைக் கரையிலே கிடைத்த இரத்தினங்களைக் கையால் வாரி ஆ நெருப்புக் கங்குகள் என்று சொல்லித் தண்ணீரில் தன் கைகளைத் தேய்த்தான். கைகளை அவன் மேலே கொண்டு வந்த முத்துக்களைக் கண்ட குரங்கானது அது நெருப்புக் கொப்புளம் என்று வாயால் ஊதிற்று. இங்கு செம்மணிகளை நெருப்புக் கங்குகள் என்றார். முத்துக்கள் கொப்புளங்கள் ஆயின.

### ஆலங்குடியான்

ஆலங்குடி என்பது ஒரு சிவத்தலம். அங்குள்ள சிவனின் பெயர் ஆலங்குடியான் என்பது. அதற்கு நஞ்சு குடியாதவன் என்று ஒரு பொருள் உண்டு. இரு பொருள் தரும் அச்சொல்லல வைத்துக் காளமேகம் பாடிய கவிதை இது.

*ஆலங்குடியானை ஆலாலம் உண்டானை*
*ஆலங் குடியான்என்(று) ஆர்சொன்னார் - ஆலங்*
*குடியானே ஆயில் குவலயத்தோர் எல்லாம்*
*மடியாரோ மண்மீதி லே.*

**விளக்கம் :** ஆலங்குடியில் வீற்றிருக்கும் பெருமானை ஆலகால நஞ்சினை உண்டு அருளிய அருளாளனை நஞ்சு குடியாதவன் என்று யார் சொன்னார் ? அவன் அன்று அந்த ஆலகால நஞ்சினைக் குடியாது இருந்தால் உலகத்தவர் அனைவரும் மண்மேல் மடிந்து வீழ்ந்திருக்க மாட்டார்களோ ?

**ஊர் காணார் :**

அந்த நாளில் அமுதம் பெறக் கருதி அசுரர்களும் அமரர்களும் பாற்கடலைக் கடைந்த போது ஆலகால நஞ்சு தோன்றியது. சிவபெருமான் அந்த நஞ்சினை உண்டு உலகினைக் காத்தார். அவர் நஞ்சுண்ணாது இருந்தால் என்ன நேர்ந்திருக்கும்? என்ற வினாவிற்கு விடையாகக் கவிஞர் பாடிய பாட்டு.

*கடுக்கை முடியானே காலை முடித்தான் போல்*
*கடுக்கைமுடி யான்ஆகில் காணார் - கடுக்கை*
*உரல்அடிமீ(து) உற்றானும் உம்பர்களும் மற்றும்*
*உரல்அடிமீ(து) உற்றானும் ஊர்.*

**விளக்கம்** : கொன்றை மலரினைத் தலையிலே அணிந்த சிவபெருமானே முன் காலனைக் காலால் உதைத்து அழித்தான். அது போல அவனே நஞ்சினையும் குடித்தான். அப்படி அவன் குடியான் ஆகில் வேதமும் துதிக்கையோடு கூடிய வெள்ளையானை அது அமர்ந்து வருவோ னாகிய இந்திரனும் மற்ற தேவர்களும் மேலும் உரலிலே கட்டுண்டு ஆயர்குலப் பெண்டிர்கை மத்தினால் அடிபட்ட திருமாலும் ஆகிய இவர்கள் அனைவரும் தங்கள் ஊரைச் சென்று காண முடியாதவர்களாகி அழிந்திருப்பார்களே.

**ஏன் எரித்தீர் ?**

திருவிடைமருதூர் சென்ற காளமேகம் சிவன் மன்மதனை எரித்த நிகழ்ச்சியை நினைத்து அவரை நிந்திப்பது போலப் பாடிய பாடல்

*கண்ணன் இடும்கறியும் காட்டுசிறுத் தொண்டர்அன்பில்*
*பண்ணுசிறு வன்கறியும் பற்றாதோ - தண்ணோடு*
*மட்(டு) இசையும் சோலை மருதீச ரேபன்றிக்*
*குட்டியைஏன் தீய்த்தீர் குறித்து*

**விளக்கம் :** குளிர்ந்த தேன் பொருந்தி இருக்கும் சோலைகளை உடைய மருதூரில் கோயில் கொண்ட பெருமானே ! காட்டிலே கண்ணப்ப நாயனார் படைத்த ஊன் கறியும் அன்பினால் சிறுத் தொண்டர் பண்ணி வைத்த சிறுவன் கறியும் உமக்குப் போதாதோ? நீர் பன்றிக் குட்டியைக் குறித்து ஏன் ஐயா! சுட்டீர் ?

இங்கு பன்றி என்று குறிப்பிட்டது வராக அவதாரம் எடுத்த

திருமாலைக் குறித்தது. குட்டி என்ற சொல் திருமாலின் மகனாகிய மன்மதனைக் குறித்தது. தீய்த்தீர் என்ற சொல் எரித்தது என்ற பொருளைக் குறித்தது.

**பொய் இல்லா மெய்யர் :**

திருத்துருத்தி என்ற தலத்தில் உள்ள பெருமானைத் தரிசித்த காளமேகம் அவருடைய ஆபரணமாகிய பாம்பினைக் குறிப்பிட்டுப் பாடிய பாடல்

***காலையிலும் மாலையிலும் கடையக் கயிறு ஆகும்***
***மாலையிலும் பூமுடித்து வாழுமே - சோலைசெறி***
***செய்யில்ஆ ரம்பயிலும் செந்துருத்தி மாநகர்வாழ்***
***பொய்இலா மெய்யர்இடும் பூண்.***

**விளக்கம்:** சோலைகள் செறிந்த வயல்களிலே முத்துக்கள் விளையும் ஊராகிய செந்துருத்தி நகரிலே கோயில் கொண்டிருக்கும் பெருமானே அணிந்துள்ள ஆபரணமும் ஓர் ஆபரணமோ? அது காற்றையே உணவாக உண்ணும். பாற்கடலைக் கடையும் போது மத்தாகும். திருமால் உண்ணும் உலகத்தினை முடிமேல் சுமந்திருக்கும் அது வாழ்ந்திருக்குமோ?

**ஏறும் விடை :**

சிவனைச்சுமந்து செல்லும் வாகனமாகப் பயன்படும் நந்தியாக இருப்பது திருமாலே. திருவீழிமிழலையில் உள்ள சிவனைச் சுமக்கும் அந்த நந்தியாகிய திருமாலைச் சிறப்பித்துப் பாடிய பாடல்.

***காலால் படிஅளக்கும் கண்இடந்து பூசிக்கும்***
***சேலாம் கமடமாம் சிங்கமாம் - பால்ஆகும்***
***ஆழிஅப்பி லேதுயிலும் ஐவர்க்கும் தூதுஆகும்***
***வீழியப்பர் ஏறும் விடை.***

**விளக்கம் :** வீழியப்பர் ஏறிச் செல்லும் விடையான திருமால் தன் திருவடிகளால் உலகத்தையே அளப்பார். கண்ணைத் தோண்டி இட்டும் பூசிப்பார். பாற்கடலாகிய நீரிலும் துயிலுவார். பாண்டவர் ஐவர்க்கும் தூதனாகச் செல்வார். மேலும் அவரே மீன் ஆமை நரசிங்கம் முதலிய அவதாரங்களாயும் விளங்குவார்.

**ஒரு மணி :**

திருவரங்க நாதரை ஒரு மணியாக உவமித்துக் காளமேகம் பாடிய பாடல்

*பாங்கு பெருந்திரு ஐந்நூற்(று)இரட்டிப் பணிவிடையில்*
*தூங்கு மதில்ஒரு மாவேற்றம் உண்டு சுரர்முனிவர்*
*ஆங்(கு)அவர் செப்பற்(கு) அடங்கா(து) உலகம் அனைத்தும்பெறும்*
*ஓங்(கு)ம் அரங்கத் திருப்பெட் டகத்துள் ஒருமணியே.*

**விளக்கம் :** புகழ் பெற்ற திருவரங்கத்துப் பெட்டகத்துள் வீற்றிருக்கிறது ஓர் ஒப்பற்ற இரத்தினம். மிகவும் அழகு பொருந்தியது அது. ஆயிரம் பணவிடை நிறையளவிலே நிறுக்கப்படும் அளவு பெரியது. அதற்கு மேலும் ஒரு மா அளவு மிகுந்திருப்பது எனலாம். தேவர் முனிவர் முதலியோர் அதனைப் புகழின் அதற்குள் அடங்காத சிறப்பு உடையது. உலகம் அனைத்தையும் கொடுத் தாலும்அ தற்கு ஈடாகாத தகுதியை உடையது.

**அரங்கநாதர் :**

புகழ் பெற்ற திருவரங்கக் கோயிலின் உள்ளே இருக்கின்றார். ஒப்பில்லா இரத்தினம் போன்ற பெருமான் தன் மார்பிலே திருமகளைக் கொண்டிருப்பவர். ஆயிரம் படங்களை உடைய பாம்பணை மீது பள்ளி கொள்பவர். தேவர் முனிவர் ஆகியோரின் போற்றுதலுக்கு அப்பாற்பட்டவர். உலகனைத்தையும் தன் வயிற்றிலே வைத்துக் காக்கும் மூலமும் அவரே. இவ்வாறு இரு பொருள்படச் சிலேடையாக அமைந்த பாடல்.

**மயிலும் பாம்பும் :**

அரங்கநாதர் பாம்பணையில் பள்ளி கொண்டிருப்பவர். முருகப் பெருமான் மயில் வாகனத்தில் வருபவன். முருகன் திருமாலின் மருமகன். அவன் தன் மாமனைப் பார்க்கச் செல்கின்றான். அப்போது என்ன நிகழ்ந்தது ? என்று பாடிய பாடல்.

*திரண்(டு)இமை யோர்தொழும் தென்அரங் கேசர்முன்*
*செங்கைகள்ஆ(று)*
*இரண்(டு)உடை யோனும் எதிர்சென்றதால்எதிர்ந்*
*தார்தலைமக்கன்(டு)*

*அருண்(டு)எழும் ஐவர்க்குத் தேருர் பவன்கொள்*

*அணைவெருண்டு*

*புரண்(டு)ஒரு புற்றைக் கடந்(து)ஒரு புற்றில் புகுந்ததுவே.*

**விளக்கம் :** கூட்டம் கூட்டமாகத் தேவர்கள் திரண்டு சென்று போற்றும் சிறப்புடைய திருவரங்கர் முன்பாகச் செங்கைகள் பன்னிரண்டு உடைய முருகனும் எதிரிட்டுச் சென்றனன். அவ்வாறு சென்றதனாலே பலகைவரைக் கண்டு அஞ்சி பஞ்சபாண்டவர்க்குத் தேர் ஊர்ந்தவ னாகிய திருமால் பள்ளி கொள்கின்ற பாயலாகிய பாம்பு இருந்த இடத்தைவிட்டுப் புரண்டு ஒரு புற்றைக் கடந்து மற்றொரு புற்றிற்குள் சென்று புகுந்து ஒளிந்து கொண்டது.

**சங்க நாதம் :**

மதுரைக்கு அருகில் உள்ள அழகர் கோயிலில் இருக்கும் திருமாலைக் குறித்துப் பாடியது. திருமால் பாரதப் போர்க்களத்தில் பாண்டவர்களுக்காகப் பாஞ்சசன்னியம் என்ற சங்கை முழங்கிய தன்மையை வியந்து பாடிய பாடல்.

*சதுர்அரங்கர் சங்கத்(து) அழகர் செங்கைச்சங்கை*

*அதரமிசை வைத்திலரே ஆயின் - முதல்ஐ*

*வருங்களத்தில் முண்டகக்கை வைப்பர் அன்றே அன்று*

*பொருங்களத்தில் நூற்றுவன்முன் போய்.*

**விளக்கம் :** சதுரப்பாட்டினை உடைய திருவரங்கத்தே இருப்பவரும் சங்கினைக் கையில் கொண்டவருமான அழகர் என்ற பெருமாள் தனது செங்கையிலே சங்கினை உதட்டிலே பொருத்தி முழங்காதிருந்தால் அன்று குருசேத்திரப் போர்க்களத்தில் துரியன் உள்ளிட்ட நூற்றுவர்களுக்கு முன்னர் ஓடி முதல்வரான ஐவரும் களத்தில் தம் கைகளைத் தலைமேல் குவித்துப் பணிந்து நிற்பார்கள் அல்லவா ? (தோல்வி அடைந்திருப்பார்கள் என்பது கருத்து)

**வரதனின் யானை வாகனம் :**

காஞ்சியிலே உள்ள வரதராசப் பெருமாள் யானை வாகனம் ஏறி உலா வருகின்ற காட்சியைக் கவிஞர் வருணிக்கும் பாடல். இதில் வரும் ஒருமா என்பது ஒன்றில் இருபத்தொரு பங்கு

*எட்(டு)ஒருமா எண்காணி மீதே இருந்தகலைப்*
*பட்(டு)ஒருமா நால்மாவில் பாய்ந்ததே - சிட்டர்தொழும்*
*தேவாதி தேவன் திருஅத்தி யூர்வரதன்*
*மாஏறி வீதிவரக் கண்டு.*

**விளக்கம் :** எட்டு ஒரு மா- இரண்டு மா(எண்காணி) பத்துமா - அரை ஒரு நங்கையின் அரை (இடுப்பின் மீது) இருந்த கலைப்பட்டு (பட்டாடை) தூய ஒழுக்கம் உடையோர் வணங்கும் தேவாதி தேவன் திரு அத்திகிரி என்னும் இடத்தில் இருப்போனும் ஆகிய வரதராசப் பெருமான் யானை என்ற விலங்கின்மேல் ஏறித் திருவீதி வலம் வரக்கண்டு இடுப்பில் இருந்து காதல் மயக்கில் கீழே விழுந்தது.

**மண்ணை உண்டார் :**

கண்ணபுரப் பெருமாளை வணங்கச் சென்ற காளமேகப் புலவருக்கு அவர் மண்ணை உண்ட செய்தி நினைவுக்கு வந்த போது பாடிய பாடல்

*கண்ணபுரம் கோயில் கத(வு)அடைத்துத் தாழ்போட்டார்*
*மண்ணைஉண்டார் வெண்ணெய்உண்ட மாயனார் - என்னும்*
*சிரக்கப் பரைஏந்திச் செங்காட்டில் ஈசர்*
*இரக்கப் புறப்பட்டார் என்று.*

**விளக்கம் :** திருச்செங்காட்டிலே கோயில் கொண்டுள்ள ஈசன் மதிக்கத் தக்க தலையோடு ஆகிய பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்தியவராய்ப் பிச்சை பெறப் புறப்பட்டு விட்டார் என்பதை அறிந்த கண்ணபுரக் கோயிலார் திருமாலும் அவரைத் தொடர்ந்து பிச்சை ஏற்கப் போய் விடக் கூடாதே என்று அஞ்சிக் கோயில் கதவை அடைத்துத் தாழ் போட்டனர். அதனாலே வெண்ணெய் உண்ட மாயனார் மண்ணைத் தின்றாராம். பிட்சாடன மூர்த்தியாக இறைவன் வந்த நிகழ்வையும் கிருஷ்ணாவதாரத்தில் கண்ணன் மண்ணை உண்ட நிகழ்வையும் இணைத்துப் பாடிய நயத்தை உணரலாம்.

**பெருமாள் பிறந்த நாள் :**

வைணவத் தலமாகிய திருக்கண்ணபுரத்திலே வீற்றிருக்கும் பெருமாளின் திருநாமம் சவுரி நாராயணன் என்பதாகும். அவர் பிறந்த நட்சத்திரம் அத்தம். அதனைக் குறித்துப் பாடிய பாடல்.

*உத்திரத்துக்(கு) ஓர்நாள் உரோணிக்குப் பத்தாம்நாள்*
*சித்திரைக்கு நேரே சிறந்தநாள் - எத்திசையும்*
*கார்ஆரும் பூஞ்சோலைக் கண்ணபுரம் வாழ்சவுரி*
*நாராய ணன்பிறந்த நாள்.*

**விளக்கம் :** எத்திசையிலும் மேகங்கள் படிகின்ற பூஞ்சோலைகளை உடைய திருக்கண்ண புரத்திலே வீற்றிருக்கும் சவுரிநாராயணனின் பிறந்த நாள் உத்திரத்துக்கு அடுத்ததான நட்சத் திரமும் உரோகிணிக்குப் பத்தாவதான நட்சத்திரமும் சித்திரைக்கு நேரே முற்பட்டதான நட்சத்திரமும் ஆன சிறப்பான அந்த நட்சத்திரம் என்பர்.

**உன்னிலும் நானதிகம்**

காளமேகம் கண்ணபுரம் சென்றபோது மழை பெய்யத் தொடங்கியதால் அங்கிருந்த பெருமாள் கோயிலில் ஒதுங்கினார். அக்கோயில் நம்பியார் இவரை உள்ளே விடவில்லை. கதவை அடைத்துத் தாழிட்டார். அப்போது பெருமாளை நோக்கிப் பாடிய பாடல்

*கண்ணபுர மாலே கடவுளிலும் நீ அதிகம்*
*உன்னிலுமோ யான்அதிகம் ஒன்றுகேள் - முன்னமே*
*உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக்(கு) ஒன்றும்இல்லை*
*என்பிறப்(பு)எண் ணத்தொலையா தே.*

**விளக்கம் :** கண்ணபுரப் பெருமாளே ! கடவுளாகிய சிவபெருமானைக் காட்டிலும் நீ பெரியவனே. உன்னைக் காட்டிலும் யானே பெரியவன். ஒரு செய்தி சொல்வேன் கேள். முன்னமே உன் பிறப்பு பத்தாகும். உயர் சிவனுக்கு ஒரு பிறப்பும் இல்லை. என் பிறப்போ எண்ணத் தொலையாத அளவுடையது.

**புறப்பட்ட வேடிக்கை**

சிவபெருமான் நகர்வலம் வந்தமை கண்ட காளமேகம் பாடிய பாடல்

*வாணியன் பாடட வண்ணான் சுமக்க வடுகன்செட்டி*
*சேணியன் போற்றக் கடற்பள்ளி முன்தொழத் தீங்கரும்பைக்*
*கோணியன் வாழ்த்தக் கருமான் துகில்தனைக் கொண்(டு) அணிந்த*
*வேணியன் ஆனவன் தட்டான் புறப்பட்ட வேடிக்கையே.*

**விளக்கம் :** நான்முகன் மறையோதி வரவும் வெண்ணிறமுடைய நந்தி சுமந்து வரவும் வயிரவன் இந்திரன் முருகன் ஆகியோர் போற்றி வரவும்

திருப்பாற்கடலில் பள்ளி கொள்வோன் ஆகிய திருமால் வணங்கவும் இனிமையான கரும்பை வில்லாக உடைய மன்மதன் வாழ்த்தவும் யானைத் தோலை அணிந்த சடாமுடியை உடைய சிவபிரான் வெளியே உலாவரப் புறப்பட்டது ஒரு வேடிக்கையே.

வாணியன் - கலைவாணியை உடையவன் (நான்முகன்) வண்ணான் - வண்ணமுள்ள ஆன் வெள்ளை நிறமுடைய நந்தி. வடுகன் - வயிரவன்செட்டி - முருகன் கடற்பள்ளி - கடலில் பள்ளி கொண்ட திருமால் கருமான் - யானை தட்டான் - காட்சிக்குத் தட்டுப்படாதவன். சாதிப் பெயர்களைக் குறித்துப பாடிய நயத்தை இதில் காணலாம்.

**கனலேறி வந்தது :**

சிவபிரான் விடையேறிப் பவனி வருவதைக் கண்டு மகிழ்ச்சி மீதூரப் பாடிய பாடல்.

*கரிஒன்று பொன்மிகும் பைஏறக் கற்றவர் சூழ்ந்துதொழ*
*எரிஒன்று செல்வன் துலாத்தினால் ஏற இருண்டமஞ்சு*
*சொரிகின்ற நாகமின் சோற்றினில் ஏறித் தொடர்ந்துவர*
*நரிஒன்று சொந்தக் கனலேறி வந்தது நம்களத்தே.*

**விளக்கம் :** யானைமுகமுடைய விநாயகர் பெருச்சாளியில் ஏறி வரவும் கற்றவர்களான சான்றோர் தொழுது கொண்டே வரவும் தீ போன்ற செந்நிறமுடைய செல்வனாகிய முருகன் துலா முழுக்காடும் இடமாகிய மயூரம் என்னும் மயிலின்மேல் ஏறிவரவும் கரிய மேகங்கள் மழை பொழிகின்ற இமயத்தின் திருமகனாக உமையவள் அன்ன வாகனம் ஏறித் தொடர்ந்துவரவும் ஒரு தனிக்கடவுளான சிவன் தனக்கு உரிமையான நந்தியின்மேல் ஏறிவரக் காணும் இந்தக் காட்சி கண்கொள்ளாக் காட்சி.

**கொன்ற பழி போமோ?**

திருச்செங்காடு என்ற சிவத்தலத்திற்குச் சென்றார் காளமேகம். சிவனை வணங்கிய புலவர் சிவனை நோக்கி நீர் இப்படிக் காட்டிலே தங்கி இருந்தாலும் முன்னர் நீர் செய்த பாவங்கள் உம்மை விட்டுப் போய்விடுமோ? என்று கேட்கின்றார். காலனை உதைத்தது, சிறுத்தொண்டர் பிள்ளைக்கறி சமைத்தது ஆகிய திருவிளையாடலை இங்கே நிந்தாஸ் துதியாகப் பாடுகின்றார்.

*காலனையும் காமனையும் காட்டுசிறுத் தொண்டர்தரு*
*பாலனையும் கொன்ற பழிபோமோ - சீலமுடன்*
*நாட்டிலே வீற்றிருந்த நாதரே நீர்திருச்செங்*
*காட்டிலே வீற்றிருந்தக் கால்.*

**விளக்கம் :** சீலமுடன் நாட்டிலே வீற்றிருந்த நாதரே ! ஒழுக்கம் உடையவர் போல நாட்டில் கோயில் கொண்டுள்ள தலைவரே ! நீர் திருச்செங்காட்டிலே வந்து தங்கியிருந்தால் எமனையும் மன்மதனையும் சிறுத்தொண்டர் பாலனையும் கொன்ற பழி போமோ?

**எங்கே இருந்தான் சிவன் ?**

ஸ்ரீரங்கத்து வைணவர்கள் சிவனைக் கேலி செய்ய நினைத்தனர். புதிதாகச் சைவத்தைச் சார்ந்த காளமேகத்தை நோக்கித் திருமால் உலகை உண்ட போது உங்கள் சிவன் எங்கிருந்தான் ? எனக் கேட்டனர். அதற்குக் காளமேகம் பதிலாகக் கூறிய பாடல்

*அருந்தினான் அண்டம்எலாம் என்றுமால் ஈசன்*
*இருந்தபடி யே(து) என்(று) இயம்பில் - பொருந்தி*
*பருங்கவளம் யானைகொளப் பாகன்அதன் மீதே*
*இரந்தபடி ஈசன்இருந்தான்.*

**விளக்கம் :** அந்த நாளில் திருமால் உலகம் முழுவதையும் விழுங்கினான். அப்பொழுது ஈசன் இருந்தபடி இருந்தான் எவ்வாறு ? என்றால் யானை பெரிய கவளத்தை எடுத்து உண்கின்ற போது அதனை இயக்கும் பாகன் அதன் மீதில் இரந்த நிலைபோலச் சிவன் இருந்தான் என்று அறிக.

**கருவைப் பிரான்**

திருக்கருவை நல்லூரில் கோயில் கொண்டிருக்கும் பெருமானைப் போற்றிப் பாடுகிறார் காளமேகம். களாமரம் களவு என்று சொல்லப்படும். இது களவாடுதல் என்றும் பொருள் தரும். இப்படி இருபொருள்படப் பாடிய பாடல்

*வெண்ணெய் திருடிஉண்ட வேணி அரனார் இருக்கக்*
*கண்ணன்மேல் வைத்த கள(வு)ஏது - பெண்ணைத்*
*தலையிலே சுமந்தான்மால் சர்ப்பத்தில் ஏறி*
*அலையில் துயின்றான் அரன்.*

விளக்கம் : வெண்ணெய் திருடிஉண்ட கண்ணன் இருக்கவும் சடையணிந்த சிவன்மேல் வைத்த களவு என் பொருட்டாகவோ அரன் கங்கையாகிய ஒரு பெண்ணைத் தன் தலையில் சுமந்தானே அன்றிக் களவு செய்யவில்லையே ? ஆனால் திருமாலோ களவின் விளைவுக்கு அஞ்சிப் பாம்பின் மேல் ஏறிக்கொண்டு கடலிலே சென்று துயில்கின்றான் அல்லவோ ?

ஆண்டானும் தாதனும்

ஸ்ரீரங்கத்து வைணவரும் திருவானைக்காச் சைவர்களும் அடிக்கடி சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். சிவனடியார்களை ஆண்டான் அதாவது பெருமானால் ஆட்கொள்ளப்பட்டவர் என்றும் திருமாலடியார்களைத் தாதர் எனவும் சொல்லுவர். தாதன் என்றால் அடியவன் என்று பொருள். இதனால் ஆண்டான் அடிமை என்ற பேதம் உண்டாயிற்று. இதனால் சண்டை உண்டாகி இருக்குமோ? என்று கேட்பது போலச் சீரங்கத்தாரைப் பழிப்பது போலத் தாதர் என்று பாடிய பாடல்.

*சீரங்கத் தாரும் திருவானைக் காவாரும்*
*போர்அங்க மாகப் பொருவது(ு)ஏன் – ஓரங்கள்*
*வேண்டாம் இ(து)என்ன விபரம் தெரியாதோ*
*ஆண்டானும் தாதனும்ஆ னால்.*

விளக்கம் : சீரங்கத்து வைணவரும் திருவானைக்காச் சைவர்களும் போர்க்களத்தில் போரிடுவது போலத் தமக்குள் சண்டையிட்டுக் கொள்வது ஏனோ? இனி எதுவும் சொல்லுவது வேண்டாம். இது ஓர் அதிசயமோ? இதன் விவரம் நமக்குத் தெரியாதோ? ஆண்டானும் தாதனும் என்ற நிலையில் அவர்கள் இருந்தால் அவர்கள் சண்டையிட மாட்டார்களோ ?

பிறவாத அம்பல்

திருவலஞ்சுழி என்னும் ஊரிலே உள்ள விநாயகரைக் குறித்துப் பாடிய செய்யுள்.

*பறவாத தும்பி கருகாத வெங்கரி பண்புரண்டே*
*இறுகாத தந்தி உருகாத மாதங்கம் இந்துநுதல்*

*நிறவாத சிந்துரம் பூசாக் களபம் நெடுஞ்சுனையில்*
*பிறவாத ஆம்பல் வலஞ்சுழிக் கேவரப் பெற்றனனே !*

**விளக்கம் :** தும்பி கரி தந்தி மாதங்கம் சிந்துரம் களபம் ஆம்பல் ஆகிய சொற்கள் வெவ்வேறு பொருள்களைக் குறிப்பனவாயினும் யானையைக் குறிக்கின்ற சொற்களே. பறவாத தும்பி (வண்டு) கருகாத வெங்கரி (அடுப்புக்கரி) இறுகாத தந்தி (முறுக்கப்படாத வீணையின் தந்தி உருகாத தங்கம் (பெரிய தங்கம்) பிறை போன்ற நெற்றியில் நிறங்காட்டாத பொட்டு (சிந்துரம்) பூசாத களபம் (நறுமணச் சாந்து) சுனையில் தோன்றாத ஆம்பல் (ஆம்பற்பூ) ஆகிய விநாயகர் இருக்கும் திருவலஞ்சுழிக்கு வந்து அவர் அருளைப் பெற்றேன்.

**ஆறுமுகன் பெருமை ?**

முருகன் பவனி வருகிறான். ஆடம்பரமாக வருவதைக் கண்ட காளமேகம் இவனுக்கு அப்பன் பிச்சை எடுப்பவன். ஆத்தாளோ மலையில் உள்ள நீலி. மாமனாகிய திருமால் வெண்ணெய் திருடி உண்டவன். அண்ணன் கணபதியோ சப்பைக் காலன். பெரு வயிறன். குடும்பநிலை இப்படி இருக்க ஆறுமுகத்துக்கு வேறு என்ன பெருமை இருக்கின்றது ? என்பதாகப் பாடிய பாடல்.

*அப்பன் இரந்(து)உண்ணி ஆத்தாள் மலைநீலி*
*ஒப்பரிய மாமன் உரிதிருடி - சப்பைக்கால்*
*அண்ணன் பெருவயிறன் ஆறுமுகத் தானுக்(கு)இங்(கு)*
*எண்ணும் பெருமை இவை.*

**விளக்கம் :** தகப்பனாகிய சிவபெருமானோ பிச்சை ஏற்று உண்பவன். பெற்ற தாயோ மலையிலே பிறந்த கொடியவள். ஒப்பிட அரிய மாமனாகிய திருமாலோ உறியிலே வெண்ணெய் திருடுபவன். இவன் அண்ணனான விநாயகர் சப்பைக்கால் உடையவர். மேலும் பெரிய வயிற்றினை உடையவன். இவைதாம் ஆறுமுகனுக்கு வேறு பெருமை என்ன உள்ளது ?

**காணிக்கு வந்திருந்தான்**

சீரங்கத்துக் கோயிலார் சிவன் மகனாகிய பிள்ளையாருக்குத் திருநாமத்தை இட்டுவிட்டனர். அத்துடன் திருமாலே பரமன் என்றும் கூறினர். அதைக் குறித்துக் காளமேகம் பாடிய பாடல்.

*தந்தை பிறந்(து)இறவாத் தன்மையினால் தன்மாமன்*
*வந்து பிறந்(து)இறக்கும் வண்மையினால் - முந்தொருநாள்*
*வீணிக்கு வேளை எரித்தான் மகன்மாமன்*
*காணிக்கு வந்திருந்தான் காண்.*

**விளக்கம் :** முன்பு ஒருநாள் வீண் கருவம் கொண்ட மன்மதனை எரித்த சிவபெருமானின் மகனாகிய விநாயகர் தன் தந்தை பிறப்பு இறப்பு அற்ற தன்மையால் தன் மாமனாகிய திருமாலும் பிறந்து இறவாத் தன்மை உடையராதலால் மாமன் சொத்துக்கு வாரிசாக வந்துள்ளார் விநாயகர்.

சிவன் பிறந்து இறவாத தன்மையன். அதனால் அவருக்குப்பின் சொத்துக்கு வாரிசு இல்லை. மாமன் திருமாலின் மகனாகிய மன்மதன் எரியுண்டு போனான். அவனுக்குப் பிள்ளை இல்லை. அதனால் பிள்ளையார் வாரிசாக வந்துள்ளான். தமிழ் நாவலர் சரிதையில் கீழ் வருமாறு ஒரு பாடல் உள்ளது.

*தந்தை பிறந்(து)இறவாத் தன்மையினால் நன்மாமன்*
*அந்தம் பிறந்(து)இறக்கும் ஆதலால் - முந்துமளி*
*நாணிக்கு வில்வேளு மாய்ஆதலால்*
*காணிக்கு வந்திருந்தான் காண்.*

**நஞ்சு உண்ணி**

அமரர்களும் அசுரர்களும் அமுதம் பெறப் பாற்கடலைக் கடைந்தபோது ஆலகாலம் என்ற கொடிய நஞ்சு தோன்றியது. அதனால் அஞ்சிய அனைவரையும் காக்கும் பொருட்டு அந்த நஞ்சைச் சிவபெருமான் எடுத்து உண்டான். ஏன் அவ்வாறு உண்டான் ? என்று வினவ அதற்கு விடையாகக் காளமேகம் கூறிய பாடல்.

*சிரித்துப் புரம்எரித்தான் சிந்துரத்தைப் பற்றி*
*உரித்(து) உதிரம் பாய உடுத்தான் - வருத்தமுடன்*
*வாடும்அடி யாருடனே வானவரும் தானவரும்*
*ஓடுபயம் தீர்த்தநஞ்(சு) உணி.*

**விளக்கம் :** உயிரே அழிந்தது என்று வருந்தும் அடியார்களுடனே அமரர்களும் அசுரர்களும் ஓடிக் கொண்டு இருந்தபோது அவர்களது அச்சத்தைப் போக்கக் கருதி நஞ்சை உண்டான் சிவன். மேலும் அவன்

தன் சிரிப்பினாலே திரிபுரங்களை எரித்தவன். தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானையைப் பிடித்து அதன் தோலை உரித்து உதிரம் கொட்டிய நிலையில் இடையிலே உடுத்திக் கொண்டவன். இவற்றையெல்லாம் செய்தவன் இந்தச் சிவனே.

**நெய்யிலே கையிட்டான்**

தில்லைப் பொன்னம்பலத்தில் சிவன் நடனமாடுகிறார். அவர் கையில் மழுவாயுதத்தை ஏந்தியுள்ளார். தில்லைக் கோவிந்தராசர் வெண்ணெய் திருடியுண்ட மாயன். அவன் ஆயனும் ஆவான். இவற்றை வைத்துக் காளமேகம் பாடிய பாடல்.

*தில்லைக்கா வுக்குள் சிதம்பரனார் ஆட்டைஎடுத்(து)*
*இல்லைக்காண் என்றுமழு வேந்தினார் - சொல்லக்கேள்*
*மெய்யிலே கண்டேன்யான் மீண்டும்கேள் ஆயனுமே*
*நெய்யிலே கைஇட்டா னே.*

**விளக்கம் :** தில்லைமரங்கள் நிறைந்த காட்டின் உள்ளே சிதம்பரத்தில் கோயில் கொண்டு இருக்கும் பெருமான் நடனம் செய்தார் (ஆட்டை எடுத்தனர்). யான் எடுக்கவில்லை பார் என்று தன் செயலை மறைத்துக் கொண்டு மழுவேந்திப் போரிடவும் தயாரானார். இன்னும் சொல்வதனைக் கேள். அவருடைய உடலிலேயே அவர் ஆடு எடுத்திருந்ததன் தன்மையினை யானே நேரில் கண்டேன். மீளவும் கேள் ஆயனும் நெய்யிலே கையிட்டுச் சத்தியமும் செய்துள்ளான்.

**மாடு எடுத்துப் போவது ஏன் ?**

ஆடு திருடிய கள்வன் அவன். அவனை ஒரு மாடு எடுத்துக் கொண்டு போகின்றதே. அது என்ன மாயமோ? இப்படியும் நடக்குமோ? இது அநியாயம் அல்லவோ? என்று புலவர் கேட்கும் பாட்டு.

*ஆ(டு)எடுத்த தில்லை அனவரதத் தாண்டவனை*
*மா(டு)எடுத்துப் போவ(து)என்ன மாயமோ - நீடும்உயர்*
*வானத்தார் போற்றுகின்ற வண்மைச் சிதம்பரத்துத்*
*தானத்தார் பார்த்திருக்கத் தான்*

**விளக்கம் :** ஆட்டினை எடுத்த தில்லை அனவரதத் தாண்டவன் என்பவனை ஒரு மாடு எடுத்துப் போவதுதான் என்ன மாயமோ? உயர்ந்த வானத்தாரும் போற்றும் வண்மை உடைய சிதம்பரத்துத்

தானத்தார்கள் பார்த்திருக்கவும் இப்படி நடக்கிறதே ! சிவபெருமான் நந்தியின் மேல் ஏறிவரும் காட்சியைக் கண்டு கவிஞர் இவ்வாறு பாடுகின்றார்.

**வேணிப்பிரான்**

மன்மதனையும் முப்புரத்தையும் எரித்தான் சிவபெருமான். எனினும் உடலில் ஒருபாதி உமையவளுக்கு உரியதல்லவா ? அவன் இவற்றைப் பத்தினியின் துணை கொண்டல்லவா செய் திருக்க வேண்டும். சிவன் செயலில் சக்திக்கும் பங்கு உண்டல்லவா? என்ற கருத்தில் அமைந்த பாடல்.

*சித்தசனை முப்புரத்தைச் செந்தழலாய் வீழஒரு*
*பத்தினியைக் கொண்(டு)எரியப் பண்ணினான் - நித்தம்*
*மறைஓத வீற்றிருக்கும் மண்டலம்என் தில்லைப்*
*பிறைசூடும் வேணிப் பிரான்.*

**விளக்கம் :** தில்லை நகரில் வீற்றிருப்பவனும் இளம்பிறைசூடியவனும் சிவந்த சடைஉடையவனும் ஆகிய சிவபெருமான் மன்மதனையும் முப்புரத்தையும் செந்தழலால் எரித்து விடும் படியாக ஒப்பற்ற பத்தினியைத் துணைகொண்டுதான் அல்லவோ ? அப்படிப்பட்டவனுக்கு நாளும் மறையோத வீற்றிருக்கும் என்பதற்காகத் தானே? அது வேண்டத் தக்கதே.

**இதுவோ படைத்திறன் ?**

சிவன் முப்புரம் எரித்த சிறப்பினை உடையவன். அதனை நிந்திப்பது போலப் போற்றிப் பாடிய கவி இது.

*தில்லைக்குள் வாழும் சிதம்பர ரேஉம்மைச் செப்பஎன்றால்*
*அல்லல் பிழைப்பே பிழைத்(து)இருந் தீர்முப்பு ராதிகளை*
*வில்லைத் தொடுத்(து) எய்ய மாட்டாம லேஅந்த வேளைதனில்*
*பல்லைத் திறந்துவிட் டீர்இது வோநும் படைத்திறமே ?*

**விளக்கம் :** தில்லை நகரின் உள்ளே வாழ்கின்ற சிதம்பரரே ! உம்மைப் பற்றிச் சொல்வது என்றால் நீர் துயரமான பிழைப்பினையே பிழைத்திருக்கின்றவர். பகைவர்கள் ஆகிய முப்புராதிகளை வில் எய்து வெல்ல இயலாமல் அந்த வேளையில் பல்லைத் திறந்து(சிரிப்பு) காட்டீரே ! இதுவா நும் படைத்திறமை ?

**என் செய்வீர் ?**

சிவபெருமான் பிச்சை ஏற்று உண்கின்றான். எதனால் ? என்ற வினாவிற்கு விடையாகப் பாடிய பாடல்.

*மாடு கிடப்பாதம் மனையாள் உடல்பாதி*
*தேடுதற்குப் பிள்ளை திணைக்கடம்பன் - நாடில்*
*அர(வு)ஆ பரணம்பூண் அம்பலத்தீர் பிச்சை*
*இரவாமல் நீர்என்செய் வீர் ?*

**விளக்கம் :** மாடோ கிடப்பாதம் ஆகி விட்டது. மனையாளோ உடல் பாதி ஆகிப் போனாள். பொருள் தேடி வருவதற்கு உரிய பிள்ளையோ திணைக் கொல்லைகளிலும் கடம்பமரச் சோலைகளிலுமாகச் சோலைகளிலுமாகச் சுற்றித் திரிகின்றான். பாம்பாரணம் அணிந்தவரே! அம்பலத்தில் உள்ளவரே ! இப்படி இருக்கும் போது நீர் பிச்சை எடுக்காமல் என்னதான் செய்வீர் ?

**சொக்கலிங்க சுகம்**

மதுரை சென்ற காளமேகம் சொக்கலிங்கப் பெருமானை வணங்கிய போது ஏற்பட்ட மகிழ்வால் பாடிய கவிதை

*காண்டரிய மேனியும்ஒண் கந்தரமும் சுந்தரனாய்*
*ஆண்டதுவும் மேனிக்(கு) அமைந்ததுவும் - நீண்டமுகில்*
*மைக்கலிங்க மாமணி மாடமணி மாமதுரைச்*
*சொக்கலிங்கம் என்னும் சுகம்.*

**விளக்கம் :** காணுதற்கு அரியதான திருமேனியும் ஒளி கொண்ட செஞ்சடையும் சுந்தர னாக வந்து ஆண்டதுவும் மேலிடத்தில் அமைந்ததுவும் நீண்ட மேகங்களே கருத்த ஆடையாகவும் கொண்ட மேலே அழகிய மாடங்களை உடைய சிறந்ததான மதுரைச் சொக்கலிங்கம் என்ற பேரின்பம் தருகின்றவர் சொக்கலிங்கம். அவரைக் காண்பது சுகமே !

**திருநாமம் எது ?**

காஞ்சிப் பெருமானைப் போற்றிவரும் ஒருவர் காள்மேகத்திடம் வந்த சிவனைக் குறை கூறியும் ஒருநாள் பேசி விடுகிறார். அதனால் சினங்கொண்ட கவிஞர் காஞ்சிப் பெருமானைப் பற்றிப் பாடிய கவிதை இது.

*எருதாய்ச் சுமந்துபோய் ஏத்திக்கண் சாத்தி*
*பொரு(ளு)ஆழி வாங்கினதும் பொய்யோ ? - பெருமாள்*
*திருநாமம் என்றுநெற்றி தீட்டியதும் கச்சி*
*ஒருமா விலக்கம்அல்ல வோ?*

**விளக்கம் :** திரிபுரம் எரித்த போது எருதாகிச் சுமந்து போனவனும் சிவனைப் போற்றித் தன் கண்மலரையே திருவடிக்குக் காணிக்கை ஆக்கியவனும் அதன் மூலம் தன் சக்கரப்படையைப் பெற்றவனும் திருமாலின் செயல்கள் என்பதும் பொய்யோ ? உங்கள் பெருமாள் திருநாமம் என்று தன் நெற்றியிலே சாத்திக் கொண்டு இருப்பதுதான் என்ன ? காஞ்சிபுரத்திலே ஒப்பற்ற மாவின் அடியில் இருக்கும் சிவனைக் குறித்து விளக்கும் சிவனின் திருப்பாதங்கள் அல்லவோ ?

**கொங்கை வடு**

சிவபெருமான் அழகிய திருமேனி உடையவன் என்றாலும் அம்மையின் கொங்கை வடுக்கள் மட்டும் மறையாமல் திருமேனியில் விளங்கும் என்பதாகக் காளமேகம் பாடிய கவிதை.

*ஆறா(து) ஒருக்கா லும்ஐயாஏ கம்பருக்கு*
*மாறா வடுவாய் மறையாதே - பேறாகச்*
*செங்கையினா லேஅழுத்திச் செய்யகச்சிக் காமாட்சி*
*கொங்கையினால் இட்ட குறி.*

**விளக்கம் :** ஐயா! நான் பெற்ற பெரும் பேறாகக் கருதிச் செய் காஞ்சிக் காமாட்சி அம்மை தன் செங்கையினாலே இறுகத் தழுவி அணைத்துக் கொங்கையினாலே இட்ட அடையாளமாகிய வடு ஒருபோதும் சிவன் திருமேனியை விட்டு மறையாது என்றும் மாறாத வடுவாய் விளங்கும்.

**ஞான குரு**

தன் அடியவர்கட்குத் தானே ஞான குருவாக வந்து மெய்ப்பொருளை உபதேசித்துக் கடைத்தேற்றும் பெருமான் கச்சி ஏகம்ப நாதனே ஆவான். அவனுக்கு இந்த ஞானத்தை எவர் போதித்தனர்? அதுபற்றிப் பாடிய செய்யுள்

*எவர்தமக்கும் ஞானகுரு ஏகம்ப ரேசர்*
*அவர்தமக்கு ஞானகுரு ஆரோ - உவரிஅணை*

*கட்டினான் பார்த்திருக்கக் காதல் அவன் தலையில்*
*குட்டினான் தானே குரு.*

**விளக்கம் :** எத்தகையோருக்கும் ஞானகுருவாய் இருந்து உபதேசித்து அருள் செய்பவன் கச்சி ஏகம்பநாதர். அப்படி ஞானகுருவாக இருந்து உபதேசித்த அவனுக்கு ஞானகுரு யாரெனில் கடலில் அணைகட்டியவனான திருமால் பார்த்துக் கொண்டிருக்க அந்த நேரத்தில் அவன் மகனான நான்முகன் தலையிலே குட்டினானே அந்தச் சிவகுமாரனே சிவனுக்கு ஞானகுரு.

**புல் நீர் கேளா**

திருவண்ணாமலை சென்ற காளமேகம் அண்ணாமலையாரை வணங்கிய போது அவரது கண்கள் அங்கிருந்த நந்தியின்மேல் சென்றது. அது கல்லுருவில் இருந்ததால் புல்லும் தண்ணீரும் கேளாது என்பதை அறிந்து கொண்டு பாடிய பாடல்.

*நடக்கஅறி யாதுகால் நாலும் முடக்கிக்*
*கிடக்கஅறி யும்புல்நீர் கேளா - விடக்கை*
*யரைப்பணியார் சோணகிரி அத்தனார் ஓட்டில்*
*இரப்புணியார் ஏறும் எருது.*

**விளக்கம் :** அந்நாளில் நஞ்சினை உண்ட சிவபெருமான் அனைவருக்கும் அப்பனாக விளங்கும் சோணகிரி ஈசன் பிச்சை ஏற்று உண்கின்றவன். அதனால்தான் அவன் ஊர்கின்ற எருது நடக்க முடியாததாகி நான்கு கால்களையும் மடக்கிக் கொண்டு கிடக்க மட்டும் அறிந்ததாய் இருக்கின்றது. அதனால் புல்லும் தண்ணீரும் கேட்க அறியாது இருக்கின்றது.

**கும்ப கோணத்தான்**

சிவபெருமான் ஒளி வடிவாக நின்ற போது அவருடைய அடியினைக் காணாது திரும்பினான். அந்நிகழ்ச்சியை நினைவிற் கொண்டு கும்பகோணத்து இறைவனைக் கீழ்க்கண்ட பாடலால் போற்றுகின்றனர்.

*அம்(பு)ஆகி னான்பாதம் அன்றுபிடித்தாய்அவற்(கு)உன்*
*செம்பாதம் காட்டாத் திறம்என்னோ - உம்பர்தொழும்*

*நம்பகோ ணத்தானே நாகச் சிலைவளைத்த*
*கும்பகோ ணத்தானே கூறு.*

**விளக்கம் :** திரிபுரம் எரித்த காலத்தில் திருமாலே அம்பாகினான். அவ்வாறு அம்பானவன் பாதத்தைக் கையால் பிடித்துக் கொண்டவன் நீ. உன் பாதம் பிடித்த அவனுக்கு நீ உன் சிவந்த பாதங்களைக் காட்டி அருளாத தன்மைதான் என்னவோ? அமரர்களும் தொழும் முடிவான பொருளாக விளங்கும் பெருமானே! மேரு மலையாகிய வில்லினை அன்று வளைத்த கும்பகோணத்துப் பெருமானே ! உன்னுடைய அந்தத் தன்மை பற்றிக் கூறுவாயாக !

**ஏனோ தலை இறைஞ்சினீர்**

திருவிரிஞ்சை நகருக்கு இறைவனான சிவபெருமானைப் பற்றிய பாடல். பெருமான் தலை கவிழ்ந்து இருந்தார். ஏன் தலைகவிழ்ந்தார் எனக் கேட்பதாகப் பாடிய கவிஞர் அப்படி என்ன அவமானம் ? என்று கேட்கிறார்.

*வேண்டிய சைவனார் விட்டதூ துக்கோமுன்*
*பாண்டியனார் கையில்அடி பட்டதற்கோ - ஆண்டவரே*
*வானோர் புகழ்விரிஞ்சை மார்க்க சகாயரே*
*ஏனோ தலைஇறைஞ்சி நீனீர் ?*

**விளக்கம் :** என்னை ஆண்டுகொண்ட பெருமானே ! தேவர்களும் வந்து தொழும் சிறப்புடைய திருவிரிஞ்சை நகரிலுள்ள பெருமானே ! மார்க்க சகாயரே ! உமக்கு வேண்டியவரான சுந்தரர் அனுப்பிய தூதுக்காகவோ ? அன்றியும் முற்காலத்தில் பாண்டியனின் கைப்பிரம்பால் அடிபட்டதற்காகவோ? அன்றி வேறு எதற்காகவோ? இப்படித் தலைகவிழ்ந்து இருக்கின்றீர் ?

**யாரோ இவர் ?**

திருவீரட்டானத்தில் கோயில் கொண்டிருக்கும் பெருமானைப் போற்றிய காளமேகத்திற்குப் பெருமானின் ஆற்றல்கள் நினைவுக்கு வர அவற்றைக் குறித்துப் பாடிய கவிதை இது.

*இவரோவீ ரட்டர் எனும்நாமம் உள்ளோர்*
*இவரோ வழுவூரில் ஈசர் - இவரோ*

*கடத்தடக்க தத்துறப்பி டித்(து)இழுத்(து) தமுத்தி*
*அடித்(து) அறத்(து) உரித்(து) உடுத்த வர்.*

**விளக்கம் :** வீரட்டனார் என்ற திருப்பெயரை உடையவரும் இவர்தானோ ? திருவழுவூரில் கோயில் கொண்டிருப்பவரும் இவர்தானோ? மும்மதத்துடன் மிக்க சினங்கொண்ட யானையைப் பற்றிப் பிடித்து இழுத்து அழுத்தி அடித்துக் கொன்று தோலை உரித்து உடுத்திக் கொண்ட ஆற்றல் உடையவரும் இவர்தானோ ?

**நஞ்சு தின்றது ஏன் ?**

அமரர்களும் அசுரர்களும் ஒன்று கூடி அந்த நாளில் அமுதம் பெறப் பாற்கடலைக் கடைந்த போது தோன்றிய கொடிய நஞ்சினை உண்டு அவர்களைக் காத்தார். அதனைக் குறிப்பிட்டு அவர் தன் உயிரைவிடவே கருதி நஞ்சினை உண்டார் போலும் என்ற கருத்தில் காளமேகம் பாடிய பாடல்.

*கல்லால் அடித்ததற்கோ காலால் உதைத்தற்கோ*
*வில்லால் அடித்ததற்கோ வெட்கினீர் - சொல்வீரால்*
*மஞ்சுதனைச் சூடும்உயர் மதில்ஆனைக் காவாரோ*
*நஞ்சுதனைத் தின்ற(து) என்முன் நாள்.*

**விளக்கம் :** சாக்கியன் உம்மைக் கல்லால் அடித்தானே அதற்காகவோ ? கண்ணப்பன் உம்மைக் காலால் உதைத்தானே அதற்காகவோ ? அர்ச்சுனன் உம்மைவில்லால் அடித்தானே அதற்காகவோ ? அன்றி வேறு எதற்காகவோ ? நீர் வெட்கம் உற்றீர் ? மேகங்கள் சூழ்ந்து விளங்கும் உயர்ந்த மதிலினை உடைய திருவானைக் காவிலே வீற்றிருக்கும் பெருமானே ! நீர் முன்னாளில் நஞ்சை அருந்தினிரே அது எதற்காகவோ? அதனை எனக்குச் சொல்வீராக !

**மழபாடி யார் ?**

திருமழபாடி என்ற நகரிலே வீற்றிருக்கும் பெருமானை வணங்கச் சென்ற காளமேகம் பாடிய பாடல் இது. பெயர்தான் வயித்திய நாதர் அவருக்கு. அவருடைய நோய்களையே அவரால் நீக்க முடியவில்லை. அவர் எங்கே பிறருடைய நோய்களைத் தீர்க்கப் போகின்றார் ? என்று அவரை நிந்திப்பதாகப் பாடுகிறார்.

*வலியமழ பாடி வயித்தியநாதருக்குத்*
*தலைவலியாம் நீரேற்றம் தானாம் - குலைவலியாம்*
*கையோடு சூலையாம் கால்வாத மாம்கண்மேல்*
*ஐயோ எழுஞாயிறு ஆம்.*

**விளக்கம் :** மழபாடியில் கோயில் கொண்டிருப்பவர் வலிமை உடைய வயித்தியநாதர். அவருக்குத் தலைவலியாம். நீரேற்றமாம். குலைவலியாம். கால்வாதமாம். கண்மேல் எழு ஞாயிறாம். இத்தகைய நிலையில் அவரெங்கே பிறரைக் குணப்படுத்தப் போகின்றார்.

தலை வலிமை கொண்ட சடைக் கற்றை. தலைமேலே கங்கைநீர். அவர் அனைத்தையும் அழியச் செய்யும் ஆற்றல் உடையவர். கையிலே திருவோடு. சூலம் ஏந்தியவர். கண்கள் எழுகின்ற காலத்தில் செந்நிறமாக விளங்கும் சூரியனைப் போன்றதாம்.

**அழகர் என்றார் யார் ?**

அழகர் கோயிலிலே வீற்றிருக்கும் பெருமானைச் சோலைமலை அழகர் என்றும் அழைப்பர். அவரை அழகர் என்று எவ்வாறு சொல்ல முடியும் ? அப்படிப் பெயரிட்ட அறியாமை உடையவர் யார் ? என்று புலவர் கேட்கும் வினாவாக இப்பாடல் அமைந்துள்ளது.

*மீனமுகம் ஆனைமுகம் மேதினிஎ லாம்இடந்த*
*ஏனமுகம் சிங்கமுகம் என்னாமல் - ஞானப்*
*பழகர்என்றும் சோலைமலைப் பண்பர்என்றும் உம்மை*
*அழகர்என்றும் பெயர்இட்டார் யார் ?*

**விளக்கம் :** மச்சாவதாரம் என்று சொல்லப்படும் மீனமுகம், ஆனைமுகம், நரசிங்கமாக வந்த சிங்கமுகம் என்று இப்படி எல்லாம் சொல்லாமல் அறிவின் கனியைக் கொண்டவர் என்றும் சோலை மலையில் வாழும் பண்பாளர் என்றும் அழகிய திருமேனி உடையவர் என்றும் உம்மைப் பெயரிட்டு அழைத்தவர் எவரோ? அவதாரங்கள் பல எடுத்தவரை அழகர் என்று எப்படிச் சொன்னார்கள் ?

**வீதி வரக்கண்டு**

பூமியில் இருந்து தோன்றிய சீதையின் கணவன் அழகனாகிய இராமபிரான். அவன் வீதியிலே பவனி வருகின்றான். அவன் அழகிலே

மயங்கிய பெண் ஒருத்தியின் இடையில் இருந்த ஆடை நழுவி அவள் காலில் விழ்ந்தது. இந்த நிலையை ஒரு பாடலாக்குகின்றார் காளமேகம்.

*ஓர்ஒருமா ஒன்றுமா ஒன்பதுமா வின்கலையை*
*ஈரொருமா மும்மாவுக்(கு) ஈந்ததே - பார் அறியப்*
*பொன்மானின் பின்போன பூமங்கை ஆள்வாரைக்*
*கன்மாவின் வீதிவரக் கண்டு.*

**விளக்கம் :** உலகோர் அறியும்படி பொன்மானின் பின் சென்றவர் பூமங்கையான சீதையை ஆட்கொண்டவரான பெருமான்; அவர்தம் புண்ணிய வசத்தினாலே திருவீதியில் உலா வரக் கண்டதும் அவன் மையல் கொண்டாள். அதனால் அவள் இடையில் இருந்த ஆடை நெகிழ்ந்து அவள் காலில் வீழ்ந்தது. ஓர் ஒரு மா - ஒப்பிலாத திருமகள் போன்றவள்.

**பெண்கள் பெருமை :**

கடவுளருக்கும் பெண்பால் பற்றுண்டு. அவர்கள் தத்தம் உடலிலேயே அவர்களை வைத்துள்ளனர். இது கடைமொழி மாற்றாக அமைந்த பாடல். உலகு உண்டு உமிழ்ந்த தாமரைக் கண்ணோன் என்ற சொற்களை முதலில் கொண்டு பொருள் காண வேண்டும்.

*இந்திரையை மார்பில்வைத்தான் ஈசன் உமையைஇடத்(து)*
*அந்தி பகல் அமைத்தான் அம்புயத்தோன் - கந்தம்மிகு*
*வெண்தா மரைஇலை வேண்டிவைத்தான் நாவில்உல(கு)*
*உண்(டு)உமிழ்ந்த தாமரைக்கண் ணோன்.*

**விளக்கம் :** உலகினை உண்டு மீளவும் உமிழ்ந்த செந்தாமரைக் கண்ணன் ஆகிய திருமால் இந்திரை என்று அழைக்கப்படுகின்ற திருமகளைத் தன் மார்பில் வைத்துக் கொண்டார். ஈசனோ உமையவளைத் தன் இடப்பாகத்திலே இரவு பகலாக வைத்துக் கொண்டிருக்கின்றார். தாமரை வாசனாகிய நான்முகனோ வெண்தாமரையில் வீற்றிருக்கும் கலைமகளைத் தன் நாவில் வைத்துள்ளார். பெண்களைப் பெருமைப்படுத்தும் விதத்தைக் கடவுள்களே செய்திருக்கும் போது மனிதர்கள் நிலையைக் சொல்லவா வேண்டும் ?

**வாகனங்கள்**

நான்முகன் திருமால் சிவன் இந்திரன் குபேரன் ஆகியோரின் வாகனங்களைக் குறிப்பிட்டுச் சொல்லிய செய்யுள் இது. கடைமொழி மாற்று என்ற வகையில் அமைந்த பாடல். விதிக்காம் என்ற இறுதிச் சொல்லை முதலில் சொல்லிப் பின் தொடர்ந்து பொருள் காண வேண்டும்.

*அன்னம் திருமாலுக்(கு) ஆம்கருடன் சங்கரற்(கு)ஆம்*
*பன்இடபம் இந்திரற்(கு)ஆம் பார்க்குங்கால் - துன்னு*
*மதவா ரணம் அளகை மன்னனுக்காம் பஞ்ச*
*கதிசேர் புரவிவிதிக்(கு) ஆம்.*

**விளக்கம் :** நான்முகனுக்கு அன்னம் வாகனமாகும். கருடன் திருமாலின் வாகனமாகும். காளை சிவனுடைய வாகனமாகும். மதம் கொண்ட வெள்ளை யானை இந்திரனின் வாகனமாகும். அளகாபுரி மன்னன் ஆகிய குபேரனுக்கு ஐந்து வகையான நடைகளை உடைய குதிரை வாகனம் ஆகும்.

**ஆயிரம் வேணும்**

சிதம்பரத்திலே உள்ள பொன்னம்பலத்தில் நடனம் செய்கின்ற கூத்தப் பெருமானை வணங்க வந்தார் காளமேகம். சிவபெருமானின் காலில் அணிந்துள்ள கழலைக் கண்டு வியந்து பாடிய பாடல்.

*காரணத் தொழப்புகழக் கண்ணும்கை யும்வாயும்*
*சேன்இந் திரன்வாணன் சேடன்போல் - வேணும்*
*பனகசய னத்(து)உறைவோன்பார் இடந்தும்காணாக்*
*கனகசபை யில்தண்டைக் கால்.*

**விளக்கம் :** பாம்பணையில் பள்ளி கொண்ட திருமால் வராகமாகிப் பூமியைத் தோண்டியும் அந்நாளில் காண இயலாததாக விளங்கியதும் பொன்னம்பலத்திலே யான் காணும் பேறு பெற்றதுமாகிய கழல் விளங்கும் நின் திருவடிகளைக் காணவும் வணங்கவும் கண்ணும் கையும் நாவும் இந் திரனைப் போலவும் வருணனைப் போலவும் ஆதிசேடனைப் போலவும் ஆயிரம் ஆயிரம் கண்க ளைத் தந்தருள்க பெருமானே !

**பாண்டித் தலங்கள்**

பாண்டிய நாட்டில் உள்ள சிவத்தலங்கள் எவையென ஒரு வெண்பாவில் பாடியது.

***கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்***
***ஏடகம்நெல் வேலி இராமேசம் - ஆடானை***
***தென்பரங்குன் றம்சுழியல் தென்திருப்புத் தூர்காசி***
***வன்கொடுங்குன் றம்பூ வணம்.***

விளக்கம் : கூடல் என்பது மதுரை; புனவாயில் என்பது திருப்புனவாயில்; ஆப்பனூர் என்பது திருவாப்பனூர்; ஏடகம் என்பது திருவேடகம்; நெல்வேலி என்பது திருநெல்வேலி; இராமேசம் என்பது திருவிராமேச்சுரம்; ஆடானை என்பது திருவாடானை; தென்பரங்குன்றம் என்பது திருப்பரங்குன்றம்; திருப்புத்தூர் காசி என்பது தென்காசி; பூவணம் என்பது திருப்பூவணம்.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### வலி அறிதல்

(மன்னன் தனக்குரிய வலிமைகளை அறிதல்)

1. **வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்**
**துணைவலியும் தூக்கிச் செயல்.**

வினைவலியும் - செய்ய நினைத்த செயலின் வலிமையையும்; தன்வலியும் - அதனைச் செய்தற்குரிய தனது வலிமையையும்; மாற்றான் வலியும் - எதிர்த்து நிற்பவனின் வலிமையையும்; துணைவலியும் - தனக்கும் எதிர்ப்போனுக்கும் துணையாய் அமைந்தோர் வலிமையையும் : தூக்கிச் செயல் - ஆராய்ந்து பார்த்துச் செய்யவேண்டும்.

மன்னன் தான் செய்ய நினைத்த செயலின் வலிமையையும் அதனைச் செய்தற்குரிய தனது வலிமையையும் எதிர்நிற்பவரின் வலிமையையும் துணைநிற்போரின் வலிமையையும் ஆராய்ந்து பார்த்து அச்செயலைச் செய்யவேண்டும்.

செயல் - வியங்கோள் வினைமுற்று.

2. ஒல்வது அறிவது அறிந்து அதன்கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.

ஒல்வது அறிவது அறிந்து - தமக்கு இயன்ற செயல், அதன் வலிமையை அறிந்து; அதன்கண் தங்கி- அவற்றில் எப்போதும் மனம்வைத்து; செல்வார்க்கு - செல்லும் அரசருக்கு; செல்லாதது இல் - இயலாதது ஒன்றும் இல்லை.

தமக்கு இயன்ற செயல் அதன் வலிமை ஆகியவற்றை நன்கு அறிந்து அவற்றில் எப்போதும் மனம்வைத்துச் செல்லும் அரசருக்கு இயலாதது ஒன்றும் இல்லை.

3. உடைத்தம் வலிஅறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.

உடைத்தம் வலி அறியார் - தாம் கொண்ட வலிமையை அறியாதார்; ஊக்கத்தின் ஊக்கி - மன எழுச்சியினால் எழுந்து; இடைக்கண் - இடையில்; முரிந்தார் பலர் - முடிக்கப்பெறாது கெட்டவர் பலர் ஆவர். தாம் கொண்ட வலிமையை அறியாதார் மன எழுச்சியினால் எழுந்து இடையில் செயலை முடிக்காமல் கெட்டவர் பலர் ஆவர்.

தம் வலிமை அறிந்து ஒருசெயலைத் தொடங்க வேண்டும் என்பது கருத்து.

4. அமைந்து ஆங்கு ஒழுகான் அளவுஅறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

அமைந்து ஆங்கு ஒழுகான் - மாற்றாரோடு பொருந்தி ஒழுகுதல் இல்லாதான்; அளவு அறியான் - தன்வலிமையின் அளவையும் அறியாதவன்; தன்னை வியந்தான் - தன்னைப் பெரிதாக வியக்கின்றவன்; விரைந்து கெடும் - தொடங்கும் செயலில் விரைவாகக் கெடுவான்.

மாற்றாரோடு பொருந்தி ஒழுகாமல் தன் வலிமையின் அளவையும் அறியாமல் தன்னைப் பெரிதாக வியக்கின்றவன் தொடங்கும் செயலில் விரைவாகக் கெடுவான்.

ஒழுகான், அறியான், வியந்தான் - முற்றெச்சங்கள்

5. பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்.

பீலிபெய் சாகாடும் - மயில்தோகை ஏற்றப்பெற்ற வண்டியும்; அச்சு இறும் - அச்சு முறிந்து விடும்; அப்பண்டம் - அந்தத் தோகையும்; சால மிகுத்துப் பெயின் - மிகுதியும் அளவின்றி ஏற்றினால்.

மயில் தோகையே ஆனாலும் மிகுதியும் அளவின்றி ஏற்றினால் அத்தோகை ஏற்றப் பெற்ற வண்டியும் அச்சு முறிந்து விடும்.

வலிமை குறைந்தவரே ஆயினும் பலர் சேர்ந்தால் தன் வலிமை அழிந்துவிடும்.

6. **நுனிக் கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்**
   **உயிர்க்கிறுதி யாகி விடும்.**

நுனிக் கொம்பர் ஏறினார் - மரக்கிளையின் நுனியில் ஏறியவர்; அஃதிறந்து ஊக்கின் - அதனைக் கடந்துமேலும் செல்ல முயன்றால்; உயிர்க்கிறுதி ஆகி விடும் - அந்த முயற்சி உயிருக்கு இறுதி யாகி விடும்.

மரக்கிளையின் நுனியில் ஏறியவர் அதனைக் கடந்து மேலும் செல்ல முயன்றால் உயிருக்கு இறுதியாகி விடும். எனவே மன்னன் வலிமையின் அளவினை அறிந்து செயல்பட வேண்டும்

இறந்து - வினை எச்சம்

7. **ஆற்றின் அளவுஅறிந்து ஈக அதுபொருள்**
   **போற்றி வழங்கும் நெறி.**

ஆற்றின் அளவு அறிந்து ஈக - கொடுக்கும் முறைமையில் தம்மிடம் உள்ள அளவினை அறிந்து கொடுக்க வேண்டும்; அது - அந்த முறையே பொருள்போற்றி - பொருளைக் காத்து; வழங்கும் நெறி - கொடுக்கும் நெறியாகும்.

கொடுக்கும் முறைமையில் தம்மிடம் உள்ள பொருளின் அளவினை அறிந்து கொடுக்க வேண்டும்; அந்த முறையே பொருளைக் காத்துக் கொடுக்கும் நெறியாகும்.

8. **ஆகாறு அளவு இட்டிது ஆயினும் கேடில்லை**
   **போகாறு அகலாக் கடை.**

ஆகாறு அளவு - பொருள் ஆவதற்கான நெறியின் அளவு; இட்டிது ஆயினும் - சிறிதளவே ஆனாலும்; கேடில்லை - தீங்கு இல்லை; போகாறு அகலாக்கடை - பொருள் போகின்ற நெறி அளவு அகலமாகாமல் இருந்தால்.

பொருள் ஆவதற்கான நெறியின் அளவு சிறிதே ஆனாலும் பொருள் போகின்ற நெறிஅளவு அகலமாகாமல் இருந்தால் தீங்கு இல்லை.

**9. அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும்.**

அளவு அறிந்து - தான் கொண்ட பொருளின் அளவினை அறிந்து; வாழாதான் வாழ்க்கை - வாழாதவனின் வாழ்க்கை ; உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும் - சிறந்து இருப்பது போலத் தோன்றி ஒன்றுமில்லாததாகித் தோற்றமும் இல்லாமல் கெடும்.

தான்கொண்ட பொருளின் அளவினை அறிந்து வாழாதவனின் வாழ்க்கை சிறந்து இருப்பது போலத் தோன்றி ஒன்று மில்லாததாகிக் கெடும்.

**10. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்.**

உளவரை தூக்காத - தனக்குள்ள பொருளின் அளவைச் சிந்திக்காத ; ஒப்புரவாண்மை - பிறர்க்கு உதவுதலாகிய செயல்; வளவரை - செல்வத்தின் எல்லை ; வல்லைக் கெடும் - விரைந்து கெடும். தனக்குள்ள பொருளின் அளவைச் சிந்திக்காமல் பிறருக்கு உதவுதலினால் செல்வத்தின் எல்லை விரைந்து கெடும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### உலவாக்கோட்டை அருளியது

அதிராச் சிறப்புக் கொண்ட மதுரை மூதூரிலே அடியார்க்கு நல்லான் என்ற வேளாளன் ஒருவன் வாழ்ந்துவந்தான். தருமத்திற்கும் தருமத்தால் வரும் கீர்த்திக்கும் பாத்திரமாக இருந்தான். அவனது தரும காரிங்களுக்கு உறுதுணையாக நின்றாள்; அவனது மனைவி தருமசிலை. அவள் அன்பிலும், அருளிலும் கற்பிலும் சிறந்தவள். சிறந்த ஒழுக்கமுடையவள்.

அடியார்க்கு நல்லான் நிலம்பல உடையவனாகி உழவுத் தொழிலைச் சிறப்புறச் செய்து வந்தான். நல்லவிளைச்சல் கண்டது. ஆறில் ஒரு பங்கை அரசனுக்குக் கொடுத்துவிட்டு எஞ்சியதையெல்லாம்

சிவனடியார்களுக்குத் திருவமுது படைப்பதிலே செலவு செய்தான். ஏராளமான அடியார்கள் நல்லான் அளித்த நல்விருந்தினை உண்டு சென்றனர். நல்லானது செல்வமும் மேலும் மேலும் பெருகி வந்தது.

அந்த நிலையிலே சோமசுந்தரப் பெருமான் உலகினுக்கு ஒன்றை உணர்ந்த திருவுள்ளம் கொண்டார். தனது மிகுந்த செல்வம் குறைந்துவிட்டாலும் தனது அன்புக்குரிய இனிய பண்பினின்று அடியார்க்கு நல்லான் சிறிதும் வழுவமாட்டான் என்ற தன்மையை உலகிற்கு உணர்த்த விரும்பினார். நீர்வளம் மிகுந்த அவனது நன்செய்களிலே விளைவு குறையும்படி செய்தார். அடியார்க்கு நல்லான் அதைப் பற்றிச் சற்றேனும் சிந்தை செய்யவில்லை. கடும் வட்டி கொடுத்தும், வட்டிக்கும் வட்டி கொடுத்தும் பணம் கடனாகப் பெற்றுச் சிவனடியார்களுக்கு அமுதூட்டி வந்தான். சிறிது நாட்களில் கடன் பெறவும் இயலாது போயிற்று. தனது கொள்கையை நிறைவேற்ற நல்லானால் இப்போது முடியவில்லை. சிவனடியார்கட்கு அமுது படைக்க முடியாது போனதால் தானும் எதுவும் உண்பதில்லை என்று உபவாசம் இருந்தான். அவனது மனைவியும் கணவனுடன் சேர்ந்து உபவாசம் இருந்தாள். பட்டினியிருந்த இருவரும் நெஞ்சம் புண்ணாகினர். பசியால் உடல் வாடினார்.

பின்னர் அறக்குன்றென விளங்கிய அடியார்க்கு நல்லான் சிந்திக்கலானான். இவ்வுடம்பு என்றாவது ஒரு நாள் அழியவேண்டியது தான். இவ்வுடம்பிலிருந்து தருமகாரியம் செய்ய முடியவில்லை. இந்த உடம்பு இருந் தென்ன, போயென்ன? மனைவியோடும் சென்று சோமசுந்தரப் பெருமானிடம் விண்ணப்பித்து விட்டு உயிர்விடுதலே நன்று என்ற உறுதி பூண்டான். அதன் படியே தனது மனைவி தருமசீலையை அழைத்துக் கொண்டு திருக்கோவில் சென்றான். விஷத்தை அமுதம்போல உண்டு தேவர்களைக் காப்பாற்றிய பெருமானே ! உன்னுடைய மெய்யடியார்கள் அன்னம் பாலிப்புவழிபாடு தடைப்படுமாறு எளியேனது நிலங்கள் எல்லாம் விளைச்சல் குறைந்துவிட்டன. கடன் தருவதற்கும் யாரையும் காணோம். கடன் தரவல்லவர்களைத் தேவரீரே எனக்குக் காட்டியருள வேண்டும். இல்லாவிட்டால் இந்த உடலைத் திருச் சன்னதிமுன் கட்டையாகக் கிடத்திடுவேன், என்று தனது மனந் திறந்து சொன்னான். அப்பொழுது மதுரைப்பெருமான் திருவருளால், வேளாளப்

பெருந்தகையே ! அஞ்சவேண்டாம். உனது வீட்டிலே நாம் அரிசிக்கோட்டை யொன்று சேர்த்துள்ளோம். அது எப்போதும் எடுக்க எடுக்க குறைவுபடாத உலவாக் கோட்டை. அதிலிருந்து வேண்டிய அளவு அரிசியை நீ எடுத்துக்கொள்ளலாம். சிவநேசம் குன்றாத அடியார்களுக்கு அமுதளிப்பதோடு ஏனைய தருமங்களையும் நீ செய்யக்கடவாய். முடிவில் உனக்கு மோக்ஷம் தருவோம், என்று ஆகாசவாணி கூறியது.

வானொலி கேட்டு சந்தோஷமும் ஆச்சரியமும் கொண்டான் அடியார்க்கு நல்லான். சோமசுந்தரப் பெருமானைப் பல முறை வணங்கினான். பின்னர் இல்லாளுடன் இல்லம் சேர்ந்தான். அங்கே தனது தவத்தின் பயனைக் கண்டான். எடுக்கும்போதெல்லாம் குறையா திருக்குமாறு இறைவன் அருளிய அரிசிக்கோட்டையைக் கண்டு மிகமிக அகமகிழ்ந்தான். பெருமான் அருளிய உலவாக் கோட்டையை அனுதினமும் புஷ்பம், சந்தனம், தூபதீபம் முதலியவற்றால் வழிபட்டுப் பின்னர் அன்னம் ஆக்கும் பொருட்டும் காய்கறிகள் வாங்கும் பொருட்டும் வேண்டிய அளவே அரிசியை எடுத்துக் கொள்வான். அதனால், சிவனடியார்க்கும், அந்தணருக்கும், தென்புலத்தவர்களுக்கும், நட்புடையவர்கள் மாரிபோல வரையாது வாரி வழங்கினான். எந்நாளும் வறுமையில்லாமல் குபேரனைப்போல வாழ்ந்து வந்தான்.

அடியார்க்கு நல்லான் இவ்வாறே பலப்பல ஆண்டுகள் தருமம் செய்து வாழ்ந்தான். பிற்பாடு தனது மனைவியோடும் உறவினர்களோடும் சிவரூபம் பெற்றுச் சிவபுரம் சேர்ந்தான்.

### மாமனாக வந்து வழக்குரைத்தது

மதுரைமா நகரத்திலே தனபதி என்பவன் வாழ்ந்து வந்தான். அவன் வணிகர் குலத்திலே தோன்றியவன். குபேரசம்பத்து உடையவன். அவனது மனைவி சுசீலை அழகிலும் கற்பிலும் சிறந்து விளங்கினாள். செல்வம் சிறந்த அவர்கள் இருவரும் நெடுங்காலம் குழந்தைப் பேறு இல்லாமல் வருந்தினார்கள். ஆதலால், தனபதி தனது தங்கையின் மகனையே தனது அபிமான புத்திரனாக ஏற்றுக்கொண்டு உள்ளம் மகிழ்ந்தான். அவனது மனைவியும் மகனை ஏற்றுப் பரிவுடன் போற்றி வந்தாள். பலவகையான ஆபரணங்களை அவனுக்கு அணிவித்து அழகுறச் செய்தாள்.

தனபதி தனது தங்கையிடம் நன்றி மறந்தவனாக நடந்து கொண்டான். தன் மனைவியின்பால் கொண்ட காதல் மயக்கத்தாலே தன் தங்கையோடு அடிக்கடி கடுமையாகச் சண்டையிட்டு வந்தான். தங்கை ஒரு நாள் கோபம் கொண்டு உனக்குக் கருவம் எதற்கு? குழந்தையில்லாத பாவி நீ! என்னுடைய அருமைக் குமாரனாலல்லவோ நீ இருமைப் பயன்களை அடைவாய், என்று கூறினாள். அச் சொல் கேட்ட தனபதி மிகவும் ரோஷமும் வெட்கமும் அடைந்தான். அடுத்த பிறவியிலாயினும் குழந்தைப்பேறு கிடைக்கத் தவம் செய்ய வேண்டும், என்று விரும்பினான். ஆதலால் தனது செல்வம் முழுவதையும் தனது மருமகனுக்கே உரிமை செய்துவிட்டுத் தனது மனைவியோடு வானப்பிரஸ்த நெறியைக் கடைப்பிடிக்கச் சென்றான்.

தவ வழி சென்ற தனபதி வருவதற்கு நாளாயிற்று. அதற்கிடையே அவனுடைய தாயாதிக்காரர்கள் வல்லடி வழக்குச் செய்து மருமகனிடமிருந்து எல்லாச் செல்வத்தையும் பறித்துக் கொண்டார்கள். நன்செய்கள், நகைகள், பல பொருள்கள், அடிமையாட்கள், பசுமாடுகள் அனைத்தையும் தாயாதிக்காரர்கள் கவர்ந்து கொண்டனர். செய்வது இன்னதென்று அறியாததாயும் மகனும் கவலைகொண்டு வருத்தப்பட்டார்கள். திக்கற்றவருக்குத் தெய்வமே துணை. திருக்கோவில் சேர்ந்து சோமசுந்தரப் பெருமானை வணங்கி எவருக்கும் அம்மையப்பர் ஆனவரே ! எங்களது அவலநிலை தாங்கள் அறியாததல்லவே! எல்லாவற்றையும் பறி கொடுத்துவிட்டு உமது திருமுன் வந்து நிற்கிறோம். நானோ தமியள், எனக்கோ ஒரே மகன்; அவனும் விவரம் தெரியாத சிறுவன். எளியவர்களாகிய எங்களைக் காக்க வேண்டியது தேவரீர் கடன் என்று கூறி அழுது நிலத்திலே விழுந்தாள் தனபதியின் தங்கை. விழுந்தவள் சிறிது உறக்கம் கொண்டாள். சிவபெருமான் திருவருளாலே, அப்போது கனவொன்று கண்டாள். அதிலே சிவபெருமான் அந்தண உருவத்தோடு எழுந்தருளி, பெண்ணே! பொழுது விடிந்ததும் தாயாதிக்காரர்களை யெல்லாம் அரசன்மீது ஆணைகூறித் தரும சபைக்குக் கொண்டுவந்து விடு. யாமே வருவோம். அறிவில் சிறந்த பெரியவர்கள் ஒப்புக்கொள்ளும்படி பொய் வழக்கைத் தீர்த்துப் பொருள்கள் எல்லாவற்றையும் உனக்கு மீட்டித் தருவோம் என்று அருளிச் செய்தார். விழிப்புற்ற மாது வியப்பும் உவகையும் கொண்டாள். சோமசுந்தரப் பெருமானை வாழ்த்திக்கொண்டேதன் மகனோடு வீடு திரும்பினாள்.

மறுநாள் விடிந்தது. திருக்கோவில் சென்று அம்பலவாணரை வணங்கி வந்த வணிகரது தாயாதிக் காரர் இருப்பிடம் சென்று பலர் கேட்கும்படி, தரும நெறி தவறிய பொய் வழக்கிலே நீங்கள் வெற்றிபெற அனுமதிக்க மாட்டேன், இங்குள்ள எல்லாரும் சாட்சியாக அரசன்மீது ஆணையிட்டேன். தருமசபைக்கு வாருங்கள் பெரியவர்கள் ஆராய்ந்து சொல்லும் தீர்ப்பைக் கேளுங்கள், எங்களது உரிமைப் பொருளைத் தந்துவிட்டுச் செல்லுங்கள், என்று கூறி மறித்தாள். தாயாதிக்காரர்கள் வலிமையுடைய முரடர்கள். அவர்கள் அவளை வைது அடித்தார்கள். அவள் உடனே தன் மகனோடு இது முறையோ? என்று கத்திக் கொண்டே தரும சபைக்குச் சென்று தனது வழக்கைக் கூறி முறையிட்டாள். விவரம் அறிந்து கொண்ட சபையோர் ஏவலர்களை அனுப்பி வைத்தனர். தனபதியின் தங்கை அப்போது ஏவலர்களோடு சென்று தாயாதிக்காரர்களை நியாயசபைக்கு இழுத்து வந்தாள்.

சோமசுந்தரப் பெருமானும் வானப்பிரஸ்தம் செய்யச் சென்றிருந்த தனபதியைப் போலவே உருவம் கொண்டு சபையில் எழுந்தருளினார். அவர் கண்களிலே கோபம் வீசியது. தாயாதிக்காரர்களைப் பார்க்கும்போது முகம் வாடியது. மகனை நோக்கும்போது முகம் மலர்ந்தது. மன்னன் இல்லையா? தருமமும் நியாயமும் ஒளிந்து கொண்டு விட்டனவோ? என்று முறையிட்டார் தனபதிப் பெருமான்.

தனபதியே நேரடியாக வந்து தோன்றியதைக் கண்ட தாயாதிக்காரர்கள் பேராச்சரியம் அடைந்த தோடு மனம் தளர்ந்துவிட்டனர். மன வலிமையை இழந்து, வெல்லமாட்டோம் என்ற எண்ணமும் கொண்டனர். தங்களது தகாத செயலை உணர்ந்து வெட்கமும் பயமும் கொண்டனர். மாமனாகி வந்த சிவ பெருமான் தனது மருமகனையும் தங்கையையும் அணைத்துக் கொண்டார். ஐயோ! நீங்கள் பரம ஏழைகள் ஆகிவிட்டீர்களா? என்று கூறி வருந்தினார். தாயும் மகனும் தனபதிப் பொருமான் காலில் விழுந்து கண்ணீர் விட்டனர். வணிகப் பெருமான் மருமகனை அன்போடு எடுத்துத் தழுவி அவன் முன்பு அணிந்திருந்த ஒவ்வொரு நகையாகப் பெயர் சொல்லி எல்லாரும் மனம் இரங்கும்படி வாய்விட்டு அழுதார். பிறகு சோமசுந்தரப் பெருமான் இருந்தருளும் திக்கு நோக்கி வணங்கி, மாணிக்கம் விற்றருளிய எங்கள் குலத்தலைவா! வழக்கைத் தீர்த்துப்

பொருளைத் தருவாய் என்று முறை செய்தார். தாயாதிக்காரரை வெகுண்டு பார்த்து விட்டுச் சபையை நோக்கி, நியாயம் வழங்குங்கள் என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

இருதிறத்தாரின் வழக்குகளை யெல்லாம் நன்கு கேட்டு ஆராய்ந்து சீர்தூக்கிய நீதிநூல் வல்ல அற வோர் தாயாதிக்காரர்கள் வழக்கு பொய்யானது என்று தீர்ப்புக் கூறினர்.

அதனைக் கேட்ட தாயாதிக்காரர்கள் வேறு வழியிலே தமது வழக்கைத் திரித்துக்கூற முயன்றார்கள். வழக்காட வந்தவர் தனபதி வணிகர் அல்ல என்று எதிர்வாதம் செய்தனர். அது சமயம் தனபதிப் பெருமான் தமது கைகொட்டிச் சிரித்து தாயாதிக்காரர் ஒவ்வொருவரையும் விளித்து அவரவர்களது குடிப்பெயர், பட்டம், காணி, தாய், தந்தை, உடன் பிறந்தவர்கள், சொந்தக்காரர்கள் , அவரவர்கள் குண வேறுபாடுகள் செய்கின்ற தொழில்கள் எல்லாவற்றையும் சிறிதும் பிழையில்லாமல் முறையாகச் சொல்லிக்காட்டினார். அது கேட்ட நீதிப் பெரியோர் இவர் தனபதி செட்டியாரே என்று முடிவாகக் கூறிவிட்டனர். நம்முடைய வழக்கு தோற்றுவிட்டது பாண்டிய மன்னன் அறிந்தால் நம்மைத் தண்டிப்பானே என்று பயந்து ஏதேதோ காரணங்களைக் கூறிக்கொண்டு பல இடங்களுக்குச் சிதறி ஓடினார்கள், தாயாதிக்காரர்கள்.

தாயாதிகள் ஓடிச் சென்றதும் நீதிமான்கள், தனபதி வணிகர் முன்பு தந்திருந்த பொருள்கள் அனைத்தும் தத்துப் புத்திரனுக்கே உரியவை என்று முடிவு கூறிச் சாசனம் செய்தனர். சாசனத்தை வணிகத் தந்தையிடம் தந்தனர். தனபதியாகத் தோன்றிய சிவ பெருமான் அனைவரும் காண மறைந்தருளினார்.

சுந்தரேச பாத சேகரபாண்டியன் அந்த வழக்கைப் பற்றிக் கேள்விப்பட்டான். தனபதி வணிகனாகத் தோன்றி மறைந்தவர் சிவபெருமானே என்பதைத் தெரிந்து மிகுந்த அதிசயம் கொண்டான். தனபதியின் தத்துப் புத்திரனுக்கு வரிசைகள் பல வழங்கினான். சிவபெருமான் திருக்கோவிலைப் பொன்னால் புதுப்பித்தான். சிறிதுகாலம் சென்றபின் தனது அருமைக் குமாரன் வரகுணனுக்கு முடிசூட்டித் தனது அரசியலைத் தந்துவிட்டுச் சிவலோகம் புகுந்தான்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**